ஞானக்களஞ்சியம்

# குணங்குடி மஸ்தான் வரலாறு

ஆசான்

பாலயோகி, குணங்குடிதாசன்

(வி. எம். ஜமால் முகம்மது, தொண்டி.)

குணங்குடி மஸ்தானின் கொள்ளுப்பேரன்.

---

வெளியீடு :

பூமகள் கம்பெனி

217, அங்கப்ப நாயக்கன் தெரு,

சென்னை-1.

முதற் பதிப்பு ஜனவரித் திங்கள். 1967.



விலை ரூபாய் இரண்டரை. ரூ. 2-50.

## சமர்ப்பணம்

குணங்குடியாரின் பேரனாகிய என் தந்தை இந்த வரலாற்றை எனக்கு உரைதந்து, அதை நான் எழுதி முடித்து, நூல் வடிவில் வெளியிட அன்னாரிடம் அனுமதி பெற்று, சென்னையம்பதி வந்து சரிதையை 25ம் தேதி அச்சகத்தில் ஒப்படைத்த பிறகு, மறுநாள் 26—12—66 ரமளான் பிறை 14, மார்கழித் திங்களில் தனது பூவாழ்வை முடித்து, காலத்தோடு கலந்து, வெளியோடு கூடி இறையடி சேர்ந்த என் அருமைப் பிதாவும், என் ஞானாசிரியருமான, தொண்டி வா மு. முகம்மது நெயினுமலை சாகிபு (கலீபத்துல்காதிரி) அவர்களுக்கே இந்நூல் சமர்ப்பணம்.

அச்சிட்டோர் : பாரி அச்சகம், 127, பிராட்வே, சென்னை-1.

# குணங்குடியாரின் முன்வம்ச பரம்பரை விபரம்

செய்யிதினு அபூபக்கர் சித்தீக்(ரலி) அவர்களின் வம்சத்தில் உதித்து வியாபார நிமித்தம் தமிழகம் வந்த அரபிகள் பரம்பரையைச் சேர்ந்தவரும், பொன்னறியா மாலை என்ற அறநூலை எழுதி புகழ்பெற்றவரும், மதுரைத் தமிழ்ச் சங்க வித்வானுமாக வாழ்ந்தவர் மின்னுநூருதீன் அம்பலம் ஆவர்.

| | | |
|---|---|---|
| அவர்கள் மகன் | — | நெய்னு முகம்மது சாகிபு |
| இவர் மகன் | — | சுல்தான் அகமது சாகிபு |
| இவர் மகன் | — | செய்கு மீரான் சாகிபு |
| இவர் மகன் | — | செய்கு நெய்னுமுகம்மது |
| இவர் மகன் | — | நெய்னு முகம்மது சாகிபு |
| இவர்களின் மகன்தான் | — | சுல்தான் அப்துல் காதிர் என்ற நமது ஞானக்களஞ்சியம், குணங்குடி மஸ்தான் சாகிபு. |

# குணங்குடியாரின் பின் சந்ததிகள் விபரம்

குணங்குடி மஸ்தான் சாகிபு உடன் பிறந்த சகோதரர் பீர் முகம்மது சாகிபு. இவர்கள் அறிவு மேதையாக விளங்கினார்கள்.

| | | |
|---|---|---|
| ஹெயார் மகன் | — | சின்னத்தம்பி சாகிபு |
| ஹெயார் மகன் | — | தம்பிக்கனி சாகிபு |
| ஹெயார் மகள் | — | மைமூன் பீவி நாச்சியார் |
| ஹெயார் மகன் | — | வா. மு. முகம்மது நெயினுமலை சாகிபு. |
| ஹெயார் மக்கள் | — | ஹைதர் அலி (1), மைமூன் பீவி (2), ஜமால் முகம்மது (3), ஷிஹாப் மைதீன் (4), இரசூல் மைதீன் (5), உவைசுல் கருணை (6) ஆக ஆறுவர். |

இந்த வரலாற்றை எழுதும் குணங்குடிதாசன் என்ற ஜமால் முகம்மது என்னும் யான் ஞான வள்ளல் குணங்குடி மஸ்தான் அவர்களின் கொள்ளுப் பேரனாகும்.

குறிப்பு :— கி. பி. 1790 ஹிஜ்ரி 1210ல் குணங்குடியார் பிறந்தார். கி. பி. 1838ல் ஹிஜ்ரி 1258ல் குணங்குடியார் மறைந்தார். தனது நாற்பத்தி எட்டாவது வயதிலேயே காலமாகி சமாதியானார்கள்.

# என்னுரை

கற்கண்டை எந்த பாகத்தில் கடித்தாலும் தித்திக்கும். அதேபோன்று பாடையிலே துறவடைந்து பரமடைந்த முத்தன் குணங்குடியான் பாடலில் எந்த இடத்தைத் தொட்டாலும் அது சுவைக்கும். அம்மகானின் வரலாற்றை இந்தச் சிறியவன் எழுதத் துணிந்த காரணம்; அவரின் கொள்ளுப்பேரன் என்ற தைரியமும், சுவாதீன பாத்தியமுமே யாகும். அன்னாரின் வரலாறு இதுவரை நூல் வடிவில் இல்லாமலிருந்தது. அந்தக் குறையை நான் பூர்த்திசெய்து விட்டதாக ஒரு மனநிறைவு. சரிதைப் படிப்பதற்குச் சளிக்காமல் இருக்கவேண்டுமே என்ற எண்ணத்தால் அடிப்படைக் கருவூலம் மாருமல் முத்தமிழ் முறையின் மூன்ருவது பாணியைக் கையாண்டிருக்கின்றேன். அவ்வளவுதான். பாடல்களுக்கெல்லாம் விளக்கஞ் செய்வ தற்கு இச் சிறுநூல் இடந்தராது என்ற ஐயத்தால் அதை விடுத்தேன். கருத்துப்பெற விரும்புவோர்கள் தயவுசெய்து அது குறித்து நேரிலோ அல்லது அஞ்சல் மூலமாகவோ தெரி வித்தால், ஏதோ அறிந்தமட்டும் அடியேன் விளக்கந்தரச் சித்தமாயுள்ளேன். இந்நூல் வெளிவருவதற்கு என் ஆக்கத் திற்கு ஊக்கமளித்த அன்பர்களான, காயல்பட்டினம் A.M.V. முத்துவாப்பா, சென்னை, நடிகமணி M. K. முஸ்தபா, கேமரா & டைரக்டர் M. M. மஸ்தான், வயலின் மிருதங் C. சிதம்பரநாதன், சர்க்கரைப்புலவர் பேரன் நடிகர் M. மீர் முகம்மது, அதிராம்பட்டினம் V. A. அப்துல்காதர் ஆஸீம் சாகிபு & M. S. ஹமீது, காரைக்குடி, சாமி ஸ்டோர் A. அழகர் சாமி, தொண்டிமாநகர் கவிஞர் K. K. மூசா, & M. K. M. அப்பாஸ் சாகிபு; கொளும்பு, செனட்டர். A. M. A. அஜீஸ் C. C. S. & கவர்ன்மென்ட் ஆயுர்வேதிக் டாக்டர் M. S. G. அமீர் ஆகியவர்களுக்கும், என் உளங்கனிந்த ஆத்மீக நன்றி. இந்நூலை அன்பர்கள் ஓதிச் சுவைத்தால் அதுவே யான்பெற்ற இன்பம்.

தொண்டி
26-1-67

இப்படிக்கு,
**பாலயோகி, குணங்குடிதாசன்.**



இந்நூல் ஆசிரியரின் அருமைத் தந்தையும், ஞானகுருவுமாகிய மாமேதை வா. மு. முகம்மதுநெயினார் சாகிபு அவர்கள்.

உதயம் 25-12-1886 }
மறைவு 26-12-1966 } வயது 80

---

அன்னாரின் அருமைப் பாக்கள்:

ஆகம வழியைக்காட்டி அகாரியம் அதனிற் றீட்டித்
தேகமதழியாவண்ணம் தத்துவ நிலையுந்தூட்டி
மோகமாம் வாழ்விற் சிக்கித் தன்னையே மறக்காவண்ணம்
யாறுவெதை விழியால் நோக்கத் தன்னையே அறிவாய்தோழா.

சமாதிநிலை இதுவென்று அறியாத குருபெற்றோர்
அஞ்சாத நிலைபெறுவரோ;
அதுவுமற்று இதுவுமற்று நடுவுற்ற நிலைபெற்றோர்
நாயகத்தனம் படைப்பர்;
சிந்தனை செல்லாச் சிவயோகமே சமாதியாம்
பேரின்ப விதியுரிதுவே;
கல்லாத கல்வியை எல்லோரும் அறிவரோ
கங்குகரை யற்றவாழ்வு;
முத்திக்கு வித்தான மோன மெய்க்குருவான
நாதன் முஹியித்தீனே.

—வா. மு. முகம்மதுநெயினார். (கலிபத்துல்காதிரி)

# பதிப்புரை

இணங்கு மெய்ஞானப் பேரின்பக்கடலின் இன்னமுதை வடித்து எம்மனோர் களித்த ஞானக்களஞ்சியமான குணங்குடிமஸ்தான் சாகிபு ஒரு துறவிமட்டுமல்ல; பல உண்மையான ஞானக்கருத்துக்களைப் புரட்சிகரமாகத் தெள்ளத்தெளிவான வகையில் உலகமேடையில் எடுத்துவைத்த மார்க்க தத்துவ மேதையுங்கூட. அன்னாரின் சரியான வாழ்க்கை வரலாறுகள் இதுகாறும் பொதுமக்களுக்கு வழியான முறையில் கிடைக்காமலிருந்தது. அந்தக் குறையை நீக்கி வைத்துச் சரியான வரலாற்றினை விரிவான முறையில் நமக்கெல்லாம் அள்ளிப்படைக்கின்றார் அவரின் வழித் தோன்றலான தொண்டி, வி. எம். ஜமால் முகம்மது என்ற பாலயோகி குணங்குடிதாசன் அவர்கள். இனி நீங்களும் படித்துச் சுவையுங்கள்.

பதிப்பகத்தார்,

பூமகள் கம்பெனி,

சென்னை-1.

# மணிக்கதிர்கள்

எண் | | பக்கம்
---|---|---
1. | உதயம் ... | 1
2. | சோதனை ... | 13
3. | போராட்டம் ... | 19
4. | திருப்பம் ... | 28
5. | மாசற்ற துறவு ... | 35
6. | சாதனை ... | 42
7. | வாக்குறுதி ... | 45
8. | தவநிலை ... | 51
9. | பரீட்சை ... | 51
10. | அழகுச்சிலை ... | 58
11. | சவால் ... | 63
12. | அற்புதம் ... | 71
13. | விரக்தி ... | 80
14. | பக்தி ... | 83
15. | காதல் ... | 91
16. | பாசம் ... | 100
17. | பரவசம் ... | 108
18. | புகழ் .... | 111
19. | ஞானஉபதேசம் ... | 114
20. | தனிமை ... | 120
21. | மறைவு ... | 126

உதயம்

# ஞானக்களஞ்சியம்
# குணங்குடி மஸ்தான்

மைமூன்! நான் உன்னைத்திருமணம் செய்து கொள்ள வேண்டுமாம். இது என்பெற்றோர்களின் கட்டளை. மதமார்க்கமும் வெளிப்படையாக அப்படித்தான் கூறுகின்றது. ஆனால் நானோ! வேறு திசைநோக்கிச் சென்றுகொண்டிருக்கிறேனே என்ன செய்வது.

(கூறுபவர் :—குணங்குடிமஸ்த்தான்.)

உங்களை இறைவன் அதற்காகவே படைத்துள்ளான் என்றால் அதைத்தடுக்க நான்யார்.' அந்தப் பாவத்தை நான் ஒருக்காலும் ஏற்றுக் கொள்ளவே மாட்டேன்.

(கூறுபவர் : குணங்குடியாரின் முறைப் பெண் மைமூன்.)

இறைவன் மீதுவைத்த பாசத்தின் பெருக்கால் இச்சாபந்தங்களை அகத்திருந்தகற்றி ஏகப்பெரு வெளியிலே இரண்டறக்கலந்து அச்சமற்ற ஆனந்த

நிலையடைந்த முத்தர்களின் பட்டியலிலே சிறப்பிடம் பெற்றவர்கள் நமது ஞானவள்ளல் குணங்குடி மஸ்த்தான் சாகிபு.

முத்துடைத்த நாடான தென்பாண்டி மண்டலத்தில் தேவகோட்டை என்ற ஊருக்கு அருகில் உள்ள குணங்குடி என்ற குக்கிராமத்தில் கி. பி. 1790-ல் பிறந்தார் இவர்.

நாட்டுவழக்கப்படி தாய்வீடுசென்று குழந்தை பெற்றுச் சுகமடைந்ததும் குணங்குடியை விட்டு தனது கணவருடைய ஊரான தொண்டிமாநகர் வந்து சேர்ந்தார்மாதா.

செல்வத்திலே நல்லவசதியான குடும்பம்; அதனால் குழந்தைக்குப் பெயர் சூட்டுவிழா தொண்டிமா நகரிலே மிகவும் கோலாகலமாக நடந்தது. குழந்தைக்கு "சுல்தான் அப்துல்காதர்" என்று பெயர்வைக்கப்பட்டது. அழகானபிள்ளை அருமையாகவளர்ந்து துள்ளிவிளையாடும் பள்ளிப் பருவம் அடைந்தது.

அக்காலத்தில் கல்வியில் தேர்ச்சியடைந்தவர்கள் நிறைந்த கீழக்கரை என்ற ஊரில் ஹஜ்ரத்-தைக்கா சாகிபு என்று பொதுமக்களால் அழைக்கப்பட்ட செய்கு அப்துல்காதர் லெப்பை ஆலீம் என்னும் கல்விக்கடலான மகான் ஒருவர் இருந்தார். அவர்களிடத்தில் நமது குணங்குடியாரை பத்தாவது வயதிலேயே கல்விகற்கச் சேர்த்தனர் பெற்றோர்கள் இவரும் கல்விகற்றுவந்தார்.

ஒரே நோக்கத்தோடு கண்ணுங் கருத்துமாகப் பாடங்களைக் கற்றுவந்தபடியால் ஐந்து ஆண்டில் அரபியிலும் தமிழிலும் வித்வானுகப்பட்டம் பெற்று தமது பதினைந்தாவது வயதிலேயே படிப்பை முடித்துக்கொண்டு தொண்டிவந்து சேர்ந்தார் இவர்.

அங்கே குணங்குடியாருடைய தாய்மாமன் மகளான "மைமூன்" என்ற அழகுமங்கையும் இவருக்கென்றே வளர்ந்து பருவம் அடைந்திருந்தாள். அந்தப் பெண்ணிடம் பேரெழிலும் பேரறிவும் சேர்ந்திருந்தன. மிகவும் இனிமையான குரலும் கலை ஆர்வமும் கொண்ட அம்மங்கை நல்லாள் அறிவாற்றல் படைத்த கல்விக்களஞ்சியமான ஒருவர் தனக்குமணுளனுக வரப்போவதை எண்ணி எண்ணி அகமகிழ்ச்சி கொண்டிருந்தாள்.

இந்நிலையில் குணங்குடியாரோ மற்ற எந்த விசயத்திலும் மனதைச் செலுத்தாமல் ஏகாந்த எண்ணமே அதிகப்பட்டவராக தொண்டியைச்சார்ந்த பனைக்காடுகளில் பகலெல்லாம் சுற்றுவதும் சில சமயம் இரவிலுங்கூட அந்தக்காட்டிலேயே தங்கி தவஞ் செய்வதுமாக இருந்துவந்தார்.

மகனின் ஒரு மாதிரியான நடவடிக்கைகளைக் கண்ட பெற்ருேர்கள் யோசித்தனர். முடிவில் திருமணம் செய்துவைத்தால் எல்லாம் சரியாகி விடும் என்று கருதினுர்கள். உடனேமகனின் சம்மதத்தை தந்தைகேட்டார். அதைக்குணங்குடியார் மறுத்தார்.

பேச்சு ஆரம்பமாயிற்று.

தந்தை:—திருமணஞ் செய்துகொள்வது நமதுமார்க்கத்தின் கட்டளையல்லவா?

மகன்:—ஆமாம்! ஆனால் உடல் இச்சையற்றவர்க்கு திருமணம் தேவை இல்லை என்பது என்முடிவு. தேகாபிமானம் திரைகடந்த தேசிகர்க்கு மோகங்களெங்கே முயலும் பாவா!

தந்தை:—அப்படியானால் மார்க்கம்?

மகன்:—இச்சையைத் தொலைத்த என் போன்றவனுக்கு மாசற்றமன வழியே மார்க்கம்.

தந்தை;—உனக்குமணமுடித்து மகிழ உன்னையீன்ற மாதா விரும்புகின்றாள்; அதை நிறைவேற்றுவது உன்கடமை.

மகன்:—யார் விரும்பினாலும், விரும்பாவிட்டாலும் இந்த போதனையை மட்டும் என்மனம் வேதனையாகக் கருதுகிறதே!

தந்தை:—எங்கள் முடிவு நீ மணஞ்செய்து வாழ வேண்டும் என்பது தான்.

மகன்:—நான் வாழவிரும்புகிறேன். ஆனால் ஒன்று!

தந்தை;—என்னப்பா அது!

மகன் :—திருமணம் செய்து என்றால் வாழவே முடியாது.

தந்தை:—காரணம்?

மகன்:— "நாடிக்குருவடி தேடி நடக்கின்ற
நற்செயலைக் கசப்பாக் குவாள்—எங்கும்
ஓடித்திரிந்தே அலைந்து பணங்கள்
ஒருக்காலே தேடென்று தாக்குவாள்—இன்னும்
ஆடென்றும், மாடென்றும், வீடென்றும்,
[தேடென்றும்

ஆண்டவனை மறப்பாக்குவாள்—பின்பு
ஈடொன்றில்லா நினைவாக்குவாள்—அந்த
மாதுகள் ஆசைவைத்து ஐயையோ வையத்தில்
பெண்கொண்டபேர்பட்டபாட்டையும் கேட்டையும்
பேசுவதென் நெஞ்சமே"

தந்தை:—அப்படியா! அதற்குமேல் உன் விதிப்படி நடக்கட்டும். (இவ்வாறு பேச்சுமுடிந்தது. தந்தை மவுனித்தார் சிலநாள் கடந்தது.)

குணங்குடியாரின் திருமண மறுப்பு முடிவைக் கேள்விப்பட்ட தாய்மாமனுர் சஞ்சலமடைந்தார். பெண்ணைப் பெற்றவர்; நம்பி இருந்தவர்; மனம் பதறினுர். அறிவுள்ள இவர் தனக்கு மருமகனுக வருவார் என்று அளவற்ற ஆசைகொண்டிருந்த எண்ண மெல்லாம் பிண்ணமடைந்து விட்டதாக எண்ணிப்புழுங்கினுர். உடனே அன்று இரவே தனது சகோதரியையும், மருமகனையும் விருந்துக்கு வருமாறு வீட்டுக்கு அழைத்தார். இவர்களும் இசைந்து சென்றனர்.

சாப்பிட்டு முடிந்ததும், மாமனார் லாவகமாகத் திருமணப் பேச்சை ஆரம்பித்தார். குணங்குடியாரோ மறுப்பொன்றும் பேசாமல் மவுனமாகவே இருந்தார். இதைக் கவனித்த மாமனார், தன்னிடம் மருமகன் பேச வெட்கப்படுவதாக எண்ணி தனதுமனைவியையும் தனது சகோதரியையும் அழைத்து என்னிடம் மருமகன்பேச நாணுகின்றார். அதனால் நீங்கள் இருவருமாக விளக்கஞ் சொல்லி சம்மதம் பெறுங்கள் என்று கூறி வெளியே சென்றுவிட்டார்.

தாயும் மாமியுமாகச் சேர்ந்து திருமணப் பேச்சை ஆரம்பித்தனர். இவர்கள் மூவரும் உறையாடுவதை எல்லாம் அறிவுடைய மங்கை "மைமூன்" வீட்டின் உள்ளிருந்தபடியே கேட்டுக்கொண்டிருக்கின்றாள். இப்போது குணங்குடியாரின் தாயார் பேசுகிறார்கள்.

தாய் :—மகனே! உனக்காகவே பிறந்தவள் மைமூன்; எத்தனையோ பணம் படைத்தவர்கள் வந்து பெண் கேட்டும் உன்னை நாடியே இல்லையென மறுத்து வந்தோம். உன்னையே நம்பி இருக்கின்ற அந்த குடும்பத்திற்கு நீ ஒரு ஊன்றுகோலாக இருக்கவேண்டாமா?

மாமி :—ஆம் தம்பி! நமது உறவு முறைகள் நீடித்து வளரவேண்டும். அறிவுள்ள உங்களுக்கு அதிகம் சொல்லவேண்டியதில்லை.

குண :—ஆம்! எனக்கு அதிகம் சொல்லவேண்டாம். இந்தப் பாவி சொல்வதையும் சற்று கேளுங்கள்.

"தாய்மார்களே பாவி! சொல்வதைத்தான் சற்றுத்
தள்ளாமல் கேட்டுக் கொள்வீர்
பூமாதேவி ஆணையாக நரகத்தில்
போகாமலும் பாதுகாக்கும்—தீயில்
வேகாமலும் கையைத் தூக்கும்—பாவி
ஆகாமலும் முகம் பார்க்கும்."

(என்று கூறியதும்)

தாய் :—ஒன்னும் புரியல்லியேடா. சொல்வதைக் கொஞ்சம் விளங்கும்படித்தான் சொல்லேன்.

குணா :—சொல்கிறேன். கவனமாகக் கேளுங்கள்.

"பெண்ணாலே கெட்டோம் என்று
உங்களைத்திட்டாதபேரை உலகத்தில் கண்டிலேன்
என்றன் கண்ணானை உங்களுக்குஒத்தாசைசொல்லிக்
கருத்தில் உவப்பாரைக் கண்டிலேன் நாளும்
மண்ணான ஆசை மயக்கங் கொண்டே பாவ
மண்ணை வாயில்போட்டுக் கொள்ளுறீர் இன்னும்
நன்னருஞ் சொர்க்கப் பதத்தையும் விட்டு
நரகக்கனல் மூட்டிக் கொள்ளுறீர். அதை
எண்ணாமல் தான்விட்டு நீங்கினால், உமக்கு
அண்ணல் குணங்குடி வாய்க்குமே."

தாய் :—அதெல்லாம் சரிதாம்பா! அதுக்காக ஒரு பருவம் வந்த பெண்ணை வாழாவெட்டியாக் கலாமா ?

குணா :—ஹூம்! யார் வாழாவெட்டி! இதுவா வாழ்வு?

"புதுப்பானை தன்னையும் கரிப்பானையாக்குவான்
பொன்னான மேனியும் போக்குவான். சோதி
மதிபோன்ற பெண்முகம் வரவோடு போலாக்கி
வாலைப் பருவத்தைப் போக்குவான். இன்னும்
முதுகைக் கூனுமாக்கி கோலுங்கைக் கொடுத்து உங்
மூர்க்கமெல்லாம் அறப்போக்குவான். இவன் [கள்
கதிகெட்ட கிழநாரியென்று புறந்திண்ணையில்
கடத்திவைத்து யிரையும் போக்குவான். அந்தச்
சதிகேடர் உறவைத்தான் நீக்கினால், பர
கதி தரும் குணங்குடி வாய்க்குமே."

*தாய் :—என்னடா இது (புன்முறுவலோடு) மூப்பு, இளமை, சாக்காடு யாரைவிட்டது. அதுக்குப் பயந்து இல்லறத்தை ஒதுக்க முடியுமா ?*

*குண :—உங்களால் முடியாவிட்டால், அது என்னால் முடியும். நான் சொல்வது வேறு. நீங்கள் சொல்வது வேறு. புரியாவிட்டால் நான் என்ன செய்வது ! விதி !*

"பொன்னாசை காட்டிப்புருடர் உம்மை ஒரு
புண்யமும் செய்யாமல் கெடுப்பான். பின்பு
சொர்ணத்தை வாரி இறைப்பான். கடைசியில்
தோட்டிகையில் உம்மை விடுப்பான். உங்கட்கு
என்னசொன்னாலும் தெரியவில்லை இனி
ஏதுபதேசத்தைப் படிப்பேன். ஐயோ
தன்னாலே தான்கெட்டால் அண்ணாவிஎன்செய்வான்
தண்ணீரைக் கண்ணினால் வடிப்பான்; அவன்
சொன்னதைக் கேட்கிற் கைபிடிப்பான். உனக்கு
முன்னே குணங்குடி கொடுப்பான்."

இவ்வாறு குணங்குடியார் கூறி முடித்ததும் தாயும் மாமியும் மறு வார்த்தை கூற வழியில்லாமல் மவுனித்தனர். அதே சமயம் உள்ளே இருந்த மங்கை "மைமூன்" இந்த சம்பாஷணைகளைக் கவனத்துடன் கேட்டுக்கொண்டிருந்தாள்.

குடும்பத்தினரோ இன்னும் சில காலம் கடந்தால் திருமணப் பற்று ஏற்படும் என்று எண்ணி அவரைத் தொந்தரவு செய்யாமல் விட்டுவிட்டனர். இப்படியே பல மாதங்கள் கடந்தன. குணங்குடியாரும் அமைதியாக இருந்து வந்தார்.

ஒருநாள்! நாகூர் ஆண்டகையுடைய தர்காவிற்குப் போய்த் தெரிசனை செய்துவிட்டு வரவேண்டும் என்ற ஆசை பிறந்தது. தன் பெற்றோர்களிடம் விடை பெற்றுக்கொண்டு பயணித்து நாகூரை அடைந்தார். அங்கு சென்று அவருடைய சமாதிக்கு அருகில் போய் நின்றார். சமாதிக்கதவு மூடப்பட்டிருந்தது. பக்தி ரசம் ததும்பிற்று கைகட்டி கண் மூடிக்கொண்டு இனிமையான குரலில் இதைப் பாடுகின்றார் :

"திக்குத் திகந்தமும் கொண்டாடியே வந்து
தீன்கூறி நிற்பர் கோடி
சிங்காசனாதிபர்கள் அதை ஏந்தியே வந்து
ஜெயஜெய வென்பர் கோடி
அக்கன் அருள்பெற்ற பெரியோர்கள் ஒலிமார்கள்
அணி அணியாக நிற்பர் கோடி
அஞ்ஞானவேர் அறுத்திட்ட மெய்ஞ்ஞானிகள்
அணைந்தருகு நிற்பர்கோடி

மக்கநகர் ஆளும் முகம்மது ரசூல்தந்த
மன்னரே என்பர்கோடி.
வசனித்து நிற்கவே கொலு வீற்று இருக்கும்
உம் மகிமை சொல வாயுமுண்டோ.

தக்க பெரியோனருள் தங்கியே நிற்கின்ற
தவராஜ செம்மேருவே
தயவுவைத்து என்னையாள் சற்குணங்குடிகொண்ட
சாகுல் ஹமீது அரசரே.

இவ்வாறு பாடி முடித்ததும் மூடி இருந்த சமாதிக்கதவு தானாகவே மெதுவாகத் திறந்தது. உடனே குணங்குடியாருக்கு ஆனந்தம் பொங்கியது.

"என்தலையில் இட்டவிதி என்னவோ என்றுநான்
இடையாமல் அருள்புரியவும்;
பந்தமதில் இட்ட மெழுகென்ன நெஞ்சுருகிப்
பதைத்திடாது அருள் புரியவும்;

பாவியாகாது எனைக் கருணை நயனங் கொண்டு
பார்த்துநல் அருள்புரியவும்;
மந்திரங்கொண்டு மாங்காய் விழாது ஆதலால்
மனமுவந்து அருள்புரியவும்;

மாரியினுநின் கருணைமாரி அனுமாருது
வருஷிக்க அருள்புரியவும்;
வந்து பணிவார்க்கு உதவும் தவராஜசிங்கமே
வரவேண்டும் என்றன் அருகே;

மாகுணங்குடி வாழும் என்னகத்தீசனே
மவுன தேசிக நாதனே."

"வகையொன்றும் அறிகிலேன் இறைவனே சன்மார்க்க
வகையொன்ற அருள்புரியவும்;
வாழிமேல் வாழினை வாக்குக் கொடுத்து எனையும்
வாழ்வித்துன் அருள்புரியவும்;

சுகசுகாதீதச்சுயஞ் சோதியாய் எழுஞ்
சுடரிடற் கருள்புரியவும்;
சும்மா இருக்கவும் சொல்லாத சூட்சம் அதில்
சூட்சம் எற்கருள் புரியவும்;

அகமகிழ்ந்திடவும் வஞ்சகம் அகன்றிடவும் நின்
அகம் உவந்து அருள்புரியவும்;
அஞ்சாதடாவென்று நெஞ்சோடு அணைத்து
ஆதரித்து அருள்புரியவும்;

மகிழா மகிழ்ச்சியொடு தவராஜ சிங்கமே
வரவேண்டும் என்றன் அருகே
மாகுணங்குடி வாழும் என் அகத்தீசனே
மவுன தேசிக நாதனே."

"திக்கற்ற பாவியைப் பக்கத்தில் வைத்து ரட்சித்து
நல்லருள் புரியவும்;
திருவுளம் இறங்கி நின் திருவடியளித்துத்
தினந்தினம் அருள்புரியவும்;

கைக்குள் வளர் நெல்லிக் கனிக்கு நிகராகக்
கடாட்சித்துன் அருள்புரியவும்;
கன்மந்தொலைத்தே கடைத்தேற்றி வைத்து
நற்கதி தந்துன் அருள்புரியவும்;

துக்கக்கடல் கடந்து அக்கரைப்பட என்னைத்
தூக்கி விட்டு அருள்புரியவும்;

துன்பங்கள் எல்லாம் தொலைத்து அடிமை
உன்பதம் தொழுதிடற்கு அருள்புரியவும்
வைக்கும் மனம் வைத்து மெய்த் தவராஜ சிங்கமே
வரவேண்டும் என்றன் அருகே
மாகுணங்குடி வாழும்என் அகத்தீசனே
மவுன தேசிக நாதனே.”

இவ்வாறு பாடி முடித்து சன்னிதானத்தில் பிரார்த்தனை புரிந்துவிட்டு கண்ணீர் மல்க அமைதியாக வெளியே வந்து ஒரு தனி இடத்தில் அமர்ந்தார்.

அங்கு கூடிய மக்கள் கூட்டம் இவரை ஒரு மகா ஞானி எனக் கருதி மரியாதை செலுத்த ஆரம்பித்தனர். இதை விரும்பாத குணங்குடியார் சமாளித்து சமயம் பார்த்து தர்காவைவிட்டு வெளியேறி நடந்துபோய் அங்கு ஓர் மரத்தடியிலே அமர்ந்தார். தன் உள்ளிருந்து ஆட்சி நடத்தும் ஆத்மீக சக்தியைப் பற்றி சிந்தனை செய்தார். இறுதியில் அதை அடையவேண்டும் என்ற ஒரே முடிவுக்கு வந்தார். அந்த மேலான எண்ணத்தோடு நாகூரை விட்டுப் புறப்பட்டார்.

வரும்போது பரங்கிப்பேட்டை என்னும் முகம்மது பந்தர் என்ற ஊரில் அரபி மகான் ஒருவர் இருப்பதாக கேள்விப்பட்டார். எப்படியும் அன்னாரைக் காணவேண்டும் என்று ஆசையுற்றார். உடனே பறங்கிப்பேட்டை நோக்கி நடந்தார். அங்கு சென்று அந்தப் பெரியாரைக் கண்டு பணிந்தார். தனக்கு ஞான வழி காட்டவேண்டும் என்று வேண்டினார். இவரின் பக்குவநிலையைக் கணித்த அந்த மகான்

தகுதிக்கேற்றவாறு ஞான உபதேசம் செய்தார். தீட்சை பெற்ற குணங்குடியார் அந்தப் பெரியாரின் சமூகத்திலேயே ஆறு மாதங்கள் தங்கி தவமுறைகளைச் செய்துகொண்டு இருந்தார்.

ஒரு நாள் அப்பெரியாரிடம் அனுமதி பெற்று தனது ஊரான தொண்டிமாநகரம் வந்து சேர்ந்தார்கள். அங்கே குணங்குடியாரின் தாய்மாமனாரும் தனக்குத் திருமணம் முடிக்க என்னும் "மைமூன்" என்ற மாதரசியைப் பெற்றவருமான முகம்மது இப்ராகீம் சாகிபு என்பவர் குணங்குடியார் தொண்டி மாநகர் வருவதற்கு இரு மாதங்களுக்கு முன்பே காலமாகிவிட்டிருந்தார்கள். இது குணங்குடியாருக்குத் தெரியாது.

தொண்டி வந்ததும் தன் மாமனார் இறந்து விட்டதைக் கேள்விப்பட்டார். எல்லையற்ற வேதனையடைந்து மாமனாரை அடக்கம் செய்திருக்கும் சமாதியை நோக்கிச் சென்றார். உருகிய உள்ளத்தோடு புலம்புகின்றார்.

"நம்பினபேர்க்கு அருள் தரும் நற்குணங்குடியானை
குருநாதன்பாதம்
நம்பினபேர்க்கு உம்பர்களும் பணிசெய்வர் என
மறைகள் நவில்கையாலே
நம்பும் அன்பர்போலும் இந்தப்பாவியேன் என்
நாடி நாடி [ஞளும்

நம்பினதற்கு அந்தக்குணங்குடியான்
செய்ததுவும் என்ன ஞாயந்தானே."

நம்பினதற்கு குணங்குடியான் செய்த
ஞாயத்தை என்ன சொல்வேன்
பம்பரம்போல் சுற்றி அயராமலும்
அழியாப் பதிதந்து எனைப்பதித்திடவும்-பர
கதிவந்து எனக்கு எதிர்த்திடவும் ஞான
மதிவந்து எனக்கு உதித்திடவும். 1

பெற்ற தகப்பன் நமக்கிவன்தான் என்றும்
பெற்றோர் பிறந்தாரை மறந்தேன். கொஞ்ச
புத்தியினால் அவன் பின்னாலேயே சென்று
புழுக்கப்பயல் போலும் திரிந்தேன். என்னை
முற்றிலும் காப்பாற்றுவான் என்று நம்பி
முடிமேலும் ஏற்றிக் கொண்டிருந்தேன். அதைச்
சற்றேனும் எண்ணாமல் என்முகம் நோக்கி நீ
சாவக்கட வதென்று அறைந்தான். இன்னும்
மெத்தமெத்த வெல்லாம் பறைந்தான். ஒருமித்து
நின்று இப்படிக் கிறைந்தான். 2

உண்டு உடுத்து பூண்டு சையோகித்துச் செல்வம்
தேடுறும் நாளில்வந்து அடுத்தான். எந்தச்
சண்டாளன் என்னத்தைக் காதில் உரைத்தானோ
சடுதியில் வந்து என்னைக் கடுத்தான். உள்ள
பண்டம்படுதலை எல்லாம் கைக்கொண்டும் என்
பண்டகசாலையுங் கெடுத்தான். தன்னை
அண்டினபேர்க் கெல்லாம் ஆளாகவும் வாரி
அளவற்ற பாக்யத்தைக் கொடுத்தான். பின்னும்
தொண்டுசெய் என்று என்னைத் தடுத்தான் யானும்
கொண்ட மூவாசையை விடுத்தான் 3

(பாடி முடித்து சமாதியை நோக்கி விண்ணப்பிக்கின்றார்.)

குண :—மாமா! பெற்றோரைவிட என்மேல் அன்பு கொண்டு உற்ற முறையிலே வளர்த்தீர்கள். எனக்கோ மூவாசையிலும் பற்றில்லை. உண்மையிலேயே திருமண இச்சை இல்லவே இல்லை. என்ன செய்வேன்! என் மனமோ துறவறத்தை நாடுகிறது. அப்படி இருக்க ஒரு பெண்ணை மணஞ்செய்து இடையில் அநியாயமாக அவளைத் தவிக்கவிட்டுப் போவது பெரிய பாவமல்லவா? நீங்களோ மகா மேதை. நான் சொல்ல என்ன இருக்கிறது. மாமா! நானும் உங்கள் சமாதிக்கு அருகிலேயே சில காலம் தனித்து இருக்க ஆசைப் படுகிறேன். என்னை ஆசீர்வதியுங்கள். (என்று நீர் மல்க கூறிவிட்டு சிரம் தாழ்த்தி அவ்விடம் விட்டு அகன்று வீடு சேர்ந்தார்.)

சில நாள் கடந்த பிறகு மாமனார் அடங்கி இருக்கும் "வாழைத் தோப்பு" என்ற இடத்தில் ஒரு குடில் அமைத்துக்கொண்டு நான்கு மாதம் தங்கி தவஞ்செய்து வந்தார்கள். ஒரு நாள் நடு நிசியிலேயே ஒரு நிகழ்ச்சி. குணங்குடியாருக்கு இல்லந்துறந்து உண்மைத் துறவியாகிவிட வேண்டும் என்ற எண்ணம் உதிக்கிறது. துறவறம் பூணுவது சாமான்யமல்ல. வழுக்கல் பாறை; ஆனால் திடமான வைராக்கியத்தோடு அந்த முடிவுக்கு வந்து விட்டார் குணங்குடியார். அந்த நாட்டம் அவருடைய உள்ளத்தில் வலுவடைந்

தது. உடனே குடிலைவிட்டு எழுந்தார். வெளியே வந்தார். "நில்!" என்று ஒரு சப்தம். நின்று நோக்கினார். மனம் அவரோடு பேசுகிறது!

மனம் :—சிறப்போடு செல்வமும் பெற்றவன் நீ! படிப்போடு பண்பையும் வளர்த்தவன் நீ! உனக்கு ஏன் இந்தப் பரதேசி எண்ணம்? உலகத்து மக்களைப்போல் நீயும் சுகித்து வாழவேண்டாமா? உன் அறிவுத்திறனை அகிலமறியச் செய்யவேண்டாமா? அதனால் நீ மணமுடித்து மங்கள வாழ்க்கை நடத்து.

குண ;—அப்படியா! ஹும்!!

"பெண்ணாசை என்கின்ற பேய்பிடித்து
ஆடும்பேதை நெஞ்சே
கண்ணால் அதில்வரும் கன்மங்கள்
யாவையும் கண்டிலையோ
எண்ணாத பாவங்கள் எண்ணாமல் செய்யும்
இப்பேர் உடம்பு
மண்ணாகுமுன் தவம் செய்வாய்
குணங்குடி வாய்த்திடுமே."

மனம் ;—ஆனாலும், சுமந்து பெற்ற பாசத்தோடு வளர்த்துப் பாடுபட்ட பெற்றோர்களின் மனதை வாடவிட்டுச் செல்வது முறையா? நீயோ பெற்றோர்களுக்குச் செய்யுங் கடமையை யுணர்ந்தவன்.

குண :—ஆம்! கடமையுணர்ந்தவன்தான்.

"ஐயோ! உலகில் அழியாவரம் பெற்று
யார் இருந்தார்!
ஐயோ!! உனக்கு அதில் ஆதரவு என்ன;
அதில் ஆசை ஏனோ?
பொய்யான வாழ்வும் புலையாட்டும் நம்பும்
புரதலர்க்கும்
ஒய்யார முள்ள குணங்குடியார்க்கும்
உறவு இல்லையே. 1

உற்றோர் இருந்து என்ன ?
பெற்றோர் இருந்துமென்ன ? உனக்குதவி
சற்றாயினும் இல்லை சொன்னேன்; சொன்னேன்
இது சத்தியமாய்;
செற்றாலும் வைத்தடி வாங்காமல்
நிற்கில் ஜெயம் பெறலாம்;
கற்றோர் குணங்குடி கொண்டிடுவாய்
மனக் கண்மணியே." 2

மனை :—முன்னறி தெய்வமான அவர்கள் வேதனை அடைந்தால் உன் சாதனை பலன் தராதே.

குணா :—ஏன் தராது?

"பெற்று எடுத்த மாதாபிதாக்கள் இருந்தாலும்
என்னைச்
செத்தவுடன் மண்ணில் திணிப்பார்—நிராமயமே
மாதாபிதாவும் மையல் தீர்த்தவாரினுக்கு
வாதாய் எனைப் பிறப்பித்தான்—நிராமயமே!
அன்னைபிதாவும் அணைந்த குற்ற ஆக்கினைக்கோ
என்னைத் தெருவினில் விட்டான்—நிராமயமே!

முன்னை இருவர் செய்த பிழைக்குப் பரிகாரம்
என்னைத் தெருவில்விட்டதேனோ—நிராமயமே!
மாதாபிதாவும் வருந்தி வருத்தி வைத்த
போதனைகள் எல்லாம் பிழைகாண் நிராமயமே!

இதைக் கேட்ட மனம் அவரை வேறு வழியில் திருப்பிவிட எண்ணுகின்றது.

மனம்:—நீ கூறுவது எல்லாம் சரிதான். ஆனால் நீயோ வாலிபன். துறவுபூண்டு செல்லுமிடத்து உனக்கு யாரையுமே தெரியாதே? பசி வந்து விடும். வாடி விடுவாயே? என்ன செய்வாய்?

குண;—பசி! வாட்டம்! ஹூம்!

"நாடு நகருண்டு நல்லோர்களும் உண்டு
நாதனும் உண்டு
ஓடும் எனக்கு உண்டு என்றெண்ணி
உன்கையில் உடல் பசித்தால்
போடு, என்று கவளத்தை வாங்கிப்
புசித்துக் கொண்டு
பாடும் குணங்குடி வாழ்ந்திடவே
பரமானந்தமே."

மனம்:—இரவில் தூங்க முடியாமல் தாங்கொணாத குளிர் அடிக்குமே; அதை எப்படி சமாளிப்பாய்?

குண.—குளிர்!

"மெத்தத் துணி போர்த்த
மெத்த மெத்தக் குளிரும்;

சற்றுத்துணி போற்றிவரச்
சற்றுக்குளிர்
இத்த துணியில்லை குளிருமில்லை இல்லை இது;
தான் உளமே செல்லக் குணங்குடியான் சீர்.''

(இதைக் கேட்ட மனம் மேலும் சொல்வதற்கு வழி இல்லாமல் வருத்தமடைந்து சொல்கிறது,)

மனம்:—என்னமோப்பா! ஏதோ எனக்குப்பட்டதை எல்லாம் சொல்லிவிட்டேன். எல்லாம் உன் நன்மைக்கே. ஆனால் நீயோ பிடிவாதமாக இருக்கிறாய். எப்படியும் உன் முடிவை மாற்றிக் கொள்வது நல்லது.

குண:—சேச் சே!

நஞ்சு உண்ணுமாப் போலும் நாதன் அருள்பெற
என்நெஞ்சே நீ புண்ணாய் நினைப்பதேன்—
அஞ்சாதே
என்று முத்தன் நம்முள்ளே ஏகாது இருப்பதால்
ஒன்று குணங்குடியின் உள்.
எண்சாண் உயரத்து இருக்கும் பனையில்
இறக்கி உண்ணும்
பஞ்சாச்சரம் என்னும் பாரிய கள்ளினைப்
பாய்ந்து எடுத்து
தஞ்சாவூர் ஆளும் மகாராசன் பாதம்
தனைப் பணிந்தால்
கெஞ்சாக் குணங்குடி கொள்வாய்
இது புத்தி கேள் நெஞ்சமே;
நாசி நுனியில் நயனத்து இடைவெளியில்
தேசிகனார் ஆடும் திருநடனம்

வாசி கொடுத்து ஓராய், எழுவாய், உணர்வாய்,
அருள் நெஞ்சே!
பாராய் குணங்குடியின்பால்.

படிக்கும் படிக்கு நடக்கின்றையோ
இப்பழஞ் செருப்பால்
அடிக்கட்டுமோ உனக்கு ஒத்தாசையார்
அறைபாவி நெஞ்சே;
முடக்கிப்படுத்துக் கொண்டு முச்சந்திக்
குப்பையின் மேடுகளில்
அடக்கிக் குணங்குடி கொள்வாய்
அது பரமானந்தமே.

ஆருக்கு வந்த விருந்து என்று இராமல்
அருமையுள்ள;
பேருக்கு வந்ததெனவே நினைந்து
பிரியமுற்று
ஊருக்கு அமைந்ததோர் அன்னங்கள்
உண்டு உண்டு ஒன்றும் முறையாப்
பாருக்குள் நல்ல குணங்குடி போய்ப்
பள்ளி கொண்டிடுமே.

மூல முகம்மது முப்பாழ் முகம்மது மோனமுள்ள
பால முகம்மது பக்தி உள்ளோர்களும் பாய்ந்து
எடுக்கும்
வேலுமுகம்மது வேதாந்த மூல விளக்குடைய
கோலுமுகம்மது குன்றுக் குணங்குடி கொண்டவர்க்கே.
நாட்டம்|என்றேஇரு உன் இருபாதத்தில் நன்னிலையின்
ஓட்டம்என்றே இரு ஒன்றான அக்கரம் ஓதியபின்

ஆட்டம்என்றேஇரு தோற்றம் எவையும் அலிபுடைய
நீட்டம்என்றேஇரு நெஞ்சே குணங்குடி நிச்சயமே.

(இவ்வாறு குணங்குடியார் மிகவும் அழுத்தந் திருத்தமாகச் சொன்னதைக் கேட்ட மனம் மறு மொழியின்றி மவுனித்து விட்டது. இரவும் விடிந்தது; மறுநாள் காலை தனது பெற்றோர்களைக் கண்டு தன் முடிவைக் கூறி விடைபெறுவதற்காக வீடு நோக்கிப் புறப்பட்டார் குணங்குடியார். தாயும் தந்தையும் வீட்டிலேயே இருந்தனர். தனயன் சந்தித்தார்.)

தந்தை:—அப்துல்காதரா! வா.

குண:—பாவா! நான் சகலமும் விட்ட சஞ்சாரத் துறவியாகிவிட நாடுகின்றேன். அதற்கு உங்களுடைய அனுமதி வேண்டும்.

தந்தை:—அனுமதி எப்படியப்பா தர மனம் வரும்! நீ மணமுடித்து இல்லற ஞானியாய் வாழ். இதுவே எங்கள் முடிவு.

குண:—பாவா! நானோ ஒரு பித்தன். அப்படியிருக்க

"பால்இருக்கும் தோல்பையைப்பற்றி இளம்பாவையரின்
கால்இடுக்குக்காகக்கரைவனோ; மேல் எடுக்கும்
உன் அருளையுங் காட்டி ஓங்கும் குணங்குடியின்
தன் அருளையும் காட்டித்தா"
என்று சதா இறைவனை வேண்டுகின்ற நான்
எப்படி மங்களத்தை நாடமுடியும்!

தாய்;—மகனே! நீயோ அறிவைப் படித்தவன்; யோசித்துப்பார். மாதா பிதாக்களின் மனதைக் கலங்கவிட்டுத் துறவு பூணுவது முறையாப்பா?

குண:—அம்மா! என்னை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும்.

"உற்றார் அழாமல் உறமுறையார் திட்டாமல்
பெற்றார் பிறந்தார் பிதற்றாமல்; எத்தாலும்
அங்குஇங்கு எனாதபடியாரும் பெருவெளியில்
தங்கல் குணங்குடியே தான்."

தந்தை:—நீ சொல்வதுதான் ஹக்கு. (உண்மை) ஆனால் உனக்கோ வயது பதினெட்டு. உலக அனுபவம் இல்லாதவன் நீ. காலை மேகமும் வாலிப ஞானமும் கடைத்தேறாது என்பார்கள். அதனால் இந்த வயதில் நீ போனால் எங்கள் மனம் தாங்காது. இன்னும் சில காலம் கடந்த பிறகு துறவடையும் முடிவு செய்.

குண:—பாவா! காலம் அல்லாவின்வசம் இருக்கிறது.

"நாளைக்கு இருந்திடலாம் எனஎண்ணி
நாட்டமுற்றால்
நாளைக்கு இருப்பதை நம்புவதோ
இல்லை நானிலத்தில்;
நாளைக்கும் பின்னைக்கும் நாம்இருப்போம்
என்ற நாட்டம் அற்று
வேளைக்கு நல்ல குணங்குடி வாழ்ந்திடும்
வேளையிதே."

(என்று கூறியதும் அங்கு மவுனம் நிலவியது.)

தன்னுடைய மகனின் வைராக்கியத்தையும், பேரறிவையும், இறையன்பையும் கண்ட தந்தை உள்ளூரப் பரவசமடைந்தார்.

தந்தை:—மகனே! நீ ஒரு புனிதப் பிறவியடா; உன்னுடன் பேசுவதற்கே வழி இல்லை. ஆனால் உனக்காகவே காத்திருக்கும் தந்தையற்ற அருமைக்குழந்தை மைமூனை நினைக்கும் போதுதான் என்னசெய்வதென்றே புரியவில்லை.

தாய்:—ஆமப்பா! அந்த அறிவுள்ள பெண்ணுக்காக வாவது உன்பிடிவாதத்தை விட்டுக்கொடுக்க மாட்டாயா?

குணங்:—விட்டுக் கொடுக்கிறேன் தாயே. ஆனால், அந்த மங்கை என்னை விரும்புவாளா என்று நான் நேரில் அறியவேண்டும். மார்க்கம் அதை அங்கீகரிக்கிறது.

(இவ்வாறு குணங்குடியார் கூறியதும் மகன் ஒரு வழிக்கு வந்துவிடுவான்போல் இருக்கிறதே என்று எண்ணிய பெற்றோர்கள் உடனே மைமூன் வீட்டுக்கு அழைத்துச் சென்று பெண்ணை சந்திக்க வைத்தனர். மங்கை இவரைக் கண்டதும் முக்காடு போட்டு ஒருபக்கமாக நாணத்துடன் ஒதுங்கி நின்றாள். அப்போது தாய்மகனைப்பார்த்து சொல்கிறார்கள்.)

தாய்:—ஏதோ கேட்கவேண்டும் என்றாயே?

குணங்;—கொஞ்சம் பொறுங்களம்மா!

பெண்ணைக் கூர்ந்துகவனித்தபடியே இருக்கிறார். இதைக்கண்ட தாயும் மாமியும் எப்படியும் சம்மதம் கிடைத்து விடும் என்றே எண்ணினர். அப்போது குணங்குடியார் சொன்னார்;

குணங்:—மைமூன்! உன்னைப்பார்க்கும்போது என் கண்களுக்கு என்தாயைப்போலத் தெரிகிறது.

(இவ்வாறுகூறி தன்தாயையும் மைமூனையும் பலமுறை மாறிமாறி பார்க்கிறார். தாயும், மாமியும் ஒன்றும் புரியாமல் விழிக்கின்றனர். மைமூன்மட்டும் குனிந்த தலையை நிமிர்த்தாமல் சிலைபோன்று அப்படியே நின்று கொண்டிருந்தாள். அப்போது தான் குணங்குடியார் அமைதியாகப் பேசுகிறார்.)

(அதைத்தான் இன்னூலின் ஆரம்பத்தில் குறிப்பிட்டேன். இனி அந்த இடத்திற்கு வருவோம். அவர் கூறுகிறார்.)

குணங்:—மைமூனு! நான் உன்னைத்திருமணம் செய்து கொள்ள வேண்டுமாம். இதுஎன்னைப் பெற்றோர்களின் கட்டளை. மார்க்கமும் அப்படித் தான் கூறுகின்றது. ஆனல் நானே வேறுதிசை நோக்கிச்சென்று கொண்டிருக்கிறேன். தேகாபிமானத் திரைகடந்தவன் நான்; மோகத்திற்கு என்மனதில் இடமேஇல்லை.

"அலா பிதிக்றில்லாஹி தத்மஇன்னல் குலூப்."

என்மனம் அல்லாவுடைய நோட்டத்திலேயே இருக்கிறது. நீ என்னை மணந்து கொள்வதால்

எவ்விதமான பலனும் அடைய முடியாதே. நீயோ அறிவுள்ள மங்கை. உன்னுடைய முடிவில்தான் என்னுடைய நரகவாழ்வும் சுவனவாழ்வும் தங்கி இருக்கிறது.

(இவ்வாறு பேசிமுடித்து நீண்டபெருமூச்சோடு தன்னுடைய உரையை நிறுத்தினார் குணங்குடியார். அப்போது தலைகுனிந்தபடியே நின்ற மைமூன் குணங்குடியாரின் பெருமூச்சைக் கேட்டதும் நிமிர்ந்தாள். இருகண்களிலும் நீர் மல்கிநின்றது. ஆனால் கண்ணீர் வடியவில்லை. அந்த அறிவு நங்கை தனது அழுதவாயைத் திறந்தாள். அமைதியோடு கூறுகின்றாள்.)

மைமூன் : — மச்சான்! உங்களை இறைவன் அதற்காகவே படைத்திருக்கிறான் என்றால் அதை நான் ஒருக்காலும் தடுக்கமாட்டேன்; அந்த பாவத்தை நான் ஏற்றுக் கொள்ளவேமாட்டேன்.

'குல்லு நப்ஸின் தாயிகத்துல் மவ்த்து'' காணப்படுபவை அனைத்தும் இறுதியிலே அழியப்படத்தான் செய்யும். காணாத ஒன்றுதான் இறைவன்; அதை அடைவது லேசானகாரியமல்ல. அந்த மேலான முடிவுக்கு வந்த உங்களைத்தடுக்க நான்யார்? அல்லது தடுப்பதுதான் நியாயமா? உலகம் அநித்தியம் என்பது எனக்கும் தெரியும். ஆனால் என் நிலைமைவேறு. உங்கள் நிலைமைவேறு. நானோ ஒரு பெண். அதனால் முப்பருவத்திலும் கட்டுப்பட்டு வாழவேண்டியவள். ஆனால், உங்கள் நிலைமை இதற்கு முற்றிலும்

மாறுபட்டது. அதனால் நான் உண்மையோடு மனப் பூர்வமாகச் சொல்கின்றேன்; இந்த விசயத்தில் யார் எதைச்சொன்னாலும் சொல்லட்டும்; நீங்கள் அதை எல்லாம் கேட்டுக் கலங்காமல் பாடுபடவேண்டிய வழியில்பாடுபட்டு அடையவேண்டியதைப் பூரண மாக அடைந்து வாழுங்கள்; இதற்கு நான் பெருமை அடைகிறேன்.

(இவ்வாறு கூறிமுடிந்ததும் மைமூன் கண்களில் இருந்து இருகண்ணத்தின் வழியாக கண்ணீர் வடிந் தன.)

இதைக்கேட்ட குணங்குடியாருக்கு ஆனந்தம் தாளமுடியவில்லை. சங்கடம் எல்லாம் பறந்தோ டிற்று. அதேசமயம். தாயாரும் மாமியும் ஆச்சரி யத்தோடு மைமூனை நோக்கியபடியே இருந்தனர். அச்சமயம் குணங்குடியார் உணர்ச்சியோடு கூறு கிறார்.

குணங்:—மைமூனா! நீதானம்மா எனது முதல் குரு; உனக்கு நான் என்றுமே கடமைப்பட்டவன்; என் துறவுக்கு தூண்டுகோலான உன்னை என் றென்றும் என் உள்ளத்தில் வைத்து மரியாதை செலுத்துவேன்.

(பிறகு தாயையும் மாமியையும் நோக்கி)

கேட்டீர்களாம்மா! மைமூனின் மறுமொழியை; சிறப்பெல்லாம் தங்கி ஓர் உருவெடுத்த அருள் வடிவம்தான் மைமூன். அவள் விடை தந்துவிட்டாள்.

அதேபடி பெரியவர்களாகிய நீங்களும் விடை தந்து அனுப்புங்கள்.

(என்று கூறி முடிப்பதற்கும் வெளியூர் சென்றிருந்த குணங்குடியாரின் சகோதரர் பீர்முகம்மது சாகிபு, அண்ணனின் துறவு முடிவை தந்தையின் மூலமாக அறிந்து ஓடோடிவந்து மாமு வீட்டுவாசலில் நுழைவதற்கும் சரியாக இருந்தது. உள்ளே இருந்த அண்ணனைப் பார்த்ததும் பீர்முகம்மது சொன்னார்.)

பீர்:—எப்படி அண்ணா விடைதர முடியும்! எங்களை எல்லாம் மறந்துவிட்டு தாங்கள் செல்வதற்கு அப்படி என்ன நடந்துவிட்டது. ஒருக்காலும் முடியாது.

குணங்:—தம்பி! பேதை மைமூனுடைய அறிவை விட வா உன் அறிவு மட்டம் அந்த வீரமங்கை எவ்வளவு உறுதியோடு விடையளித்தாள் தெரியுமா? பாவம்! நீ கலங்குகின்றாயே? சேச்சே. எப்படியானாலும் என்முடிவு முடிவுதான்.

பீர்;—அப்படியானால் நானும் கூட வருகிறேன்.

குணங்:—அதைத்தடுப்பதற்கு நான்யார்? ஆனால், எனக்காக நீ துறந்தால் அந்தத் துறவு துறவல்ல; அது நீடிக்காது. உனக்காகவே நீ துறக்கவேண்டும்.

தொட்டவுடன் ஜோதிகட்டவேண்டும் என்றால் தொடுமுன்னே சிவயோகம் கிட்டி இருக்கவேண்டும்;

இல்லை என்றால் நிலைமை சாத்தியப்படாது. அதனால் உன் மனோநிலையைக் கவனிக்கின்றபோது நீ இல்லற ஞானியாக, சிவராஜயோகியாக இருந்து சிறப்படைய வேண்டியவனாக எனக்குப்படுகிறது; உனக்கு அது தான் லாயக்கு.

(பிறகு தாயையும் மாமியையும் நோக்கி) அம்மா! உங்கள் இருவரின் குறையும் நீங்கிவிட்டன நானும் என்சகோதரனும் ஒன்றுதான் மைமூனை அவனுக்கேமனம் செய்துவையுங்கள்.

இவ்வாறுகூறி முடித்ததும் ஒருவரும் ஒன்றும் பேசமுடியாமல் வாயடைத்தனர்; குணங்குடியார் வெளியேசென்றுவிட்டார். அமைதி குடிகொண் டிருந்தது.

அன்றுபகல் தனது உற்றார் பெற்றார் மற்றோருக் கெல்லாம் முகமன் கூறிவிட்டு வீட்டைவிட்டு வெளி யேறி துறவுபூண்டு தொண்டிமாநகரில் சமாதியாகி இருக்கும் ஞானமூர்த்திகளான மனுங்கு ஒலியுல்லா அபூபக்கர் ஒலியுல்லா முதலியவர்களுக்கு மரியாதை செலுத்திவிட்டு அன்று இரவு தொண்டி கிழக்குத் தெருவில் இருக்கும் பெரிய பள்ளிவாசலில் வந்து தங்கினார்கள்.

மறுநாள் காலையில் குணங்குடியார் பரதேச யாத் திரை செய்யப் புறப்படும் சமயம், அவருடைய உத்தம நண்பர்கள் சிலர் வந்து அவரோடு உரையாடு கிறார்கள்.

நண்பர்:—தோழா! அறிவிலும் ஆற்றலிலும் எங்க ளுக்கு தலைவனாக இருந்தாய். இப்போது நீ மட்டும் போகிறாய். இனி எங்கள் அறிவு வளர்ச் சிக்கு வழிகாட்டி இல்லை.

குணங்:—அப்படியானால் நீங்களும் என்னோடு வாருங் களேன். யாருக்கு யார் துணை! அது அஞ்ஞானி கள் முடிவு.

"இன்னமா அம்வாலுக்கும் வஅவ்லாதுக்கும்
பித்னாதன், வல்லாஹு அஜ்ருன் அலீம்."

என்பது மறைவாக்கு.

"எல்லாப்படைப்பும் படைத்து இரணங்கள் யீபவனே
அல்லா ஒருவன்; அவனன்றி வேறில்லை; ஆகையினால்
சொல்லாமல் சொல்லும் சுருதிமுடிவினில் சொல்
[இறந்த
வல்லான் குணங்குடி வாழ்ந்திருப்போம் இனி
[வாருமினே"

என்று கூறி அவர்களையும் தன் வழிக்கு அழைத் தார். ஆனால் வந்தவர்களோ பாசம் நிறைந்தவர்கள். அவர்கள் சொன்னார்கள்.

நண்;—நீ வேண்டுமானால் எங்களோடு இரு. ஆனால் நாங்கள் உன்னோடு பரதேசியாய் வரவேமுடி யாது.

இதைக்கேட்ட குணங்குடியாருக்குச் சற்றுக் கோபம் வந்துவிடுகிறது; அவர் சொன்னார்;

குண :—முடியாதுதான்.

"கள் இனங்கள் உண்ணும் கழுதைகாள் என் சொலினும்
எள் அளவும் நும் இதயத்து எய்தில்லையே-உள்ளம்
இணங்காத மடமாந்தர் எக்கேடுதான் கெடினும்
குணங்குடியார்க்கு உண்டோகுறை."

இவ்வாறு நண்பர்களைப் பார்த்துக் கூறவும் அவர்கள் மவுனித்தனர். இதைக் கண்ட குணங்குடியார் கனிவாகச் சொல்கிறார்.

குணங்:—"வல்கத்ரி ஹைறிஹீ வஷர்ரிஹி, மினல்லாஹி தஆலா" எல்லாத்துக்கும் இறைநாட்டமும் ஒத்திருக்கவேண்டும்.

"சொல்லுக்கடங்காச் சுகங்காண் துறவிகட்கு
நல்லறிவுசற்றே நகுங்காண் நிராமயமே."

என்ற முடிவோடு செல்பவன் நான். இந்த விசயத்தில் என் முடிவு என்னோடிருக்கட்டும். உங்கள் முடிவு உங்களோடு இருக்கட்டும். நான் போய்வருகிறேன் எனக்கூறி எழுந்தார் குணங்குடியார்.

அச்சமயம் மாதாபிதாக்கள் முதல் உற்றார் உறவினர் ஊர்மக்களும் பள்ளியில் வந்து கூடி நின்றனர். இதைக்கண்ட குணங்குடியார் அவர்களைப் பார்த்து,

குணங்:—"எல்லோரும் என்போன்ற துறவியாகமுடியாவிட்டாலும் இறை சொல் மறை வழி நின்று

செயல்பட்டால் முடிவில் நிச்சயம் ஆன்மசித்தி ஏற்படும். அதுதான் நமது கடமை; இதுவே எனது வேண்டுகோள். ஏதோ, நான் சின்னவன். அறிந்தோ அறியாமலோ பிழைகள் ஏதும் பண்ணி இருந்தால் அதை மன்னித்துக்கொள்ளுங்கள்'' (என்று கூறிவிட்டு தன் பக்கத்தில் நின்ற பிதாவின் காலைத் தொட்டு கண்ணில் வைத்துக்கொண்டு,)

குணங்;—நான் போய்வருகிறேன் பாவா. (சற்று மௌனம்; பிறகு சபையை நோக்கி,)

அஸ்ஸலாமு அலைக்கும்

சபை:—வ அலைக்குமுஸ்ஸலாம். (விண் அதிரும் சப்தம்)

பிறகு குணங்குடியார் பள்ளியைவிட்டு வெளியே வந்து தொண்டியம்பதியைவிட்டுத் துறவியாகி இறைவனுடைய பாதையில் அடியெடுத்து வைத்தார்கள். வீதிவழியாக வரும்போது தனது அமுதவாய் திறந்து பாடிக்கொண்டே வடக்கு நோக்கி செல்கின்றார்கள்.

குணங்:—

''போவோம் குணங்குடிக்கெல்லோரும் புறப்படுங்கள்
போவோம் குணங்குடிக் கெல்லோரும்
பாவங்கள் சோர்ந்திடும் காய்ந்திடும் நீந்திடும்
மாய்ந்திடும் ஓய்ந்திடும் தீய்ந்திடும் இச்சணம்
(போவோம்)

1. அண்டம்புவனங் கொண்டநிட்டை-சாதிக்கவறியா
முண்டம்முழுதும் பட்டகட்டை-மணித்தேரோடு
தண்டிகை யானைகுதிரை ஒட்டை-வைத்துஏறிவாழும்
சண்டி உடலும் லொடலொட்டை-மின்னார்கள்
[இன்பம்
கொண்டுமயங்கிக் காமவெட்டை-நஞ்சுண்டு சாமி
ரெண்டுங்கெட்டவனேபேய்மட்டை-அவனுக்கு அந்த
தொண்டாசை கால்ரண்டுந்தான்குட்டை-விழிகுருடர்
நண்டளந்தநாளிஅவர் நமக்கேன்கான் அந்த
[தெட்டை (போ)

2. கோத்திரளான காயபொய்க்கூடு-ஒருவருக்கும்
சாற்றுக்குஆகா நாற்றக்கருவாடு-சொறிமலமும்
மூத்திரமும் ஊற்றிவைத்தஓடு- இடுமடையர்
போற்றுதற்கு ஏற்றசண்டிமாடு-உயிர்விடுக்கும்
கூற்றுவன்கை ஆயுதத்திற்குயீடு-எந்தெந்த திக்கில்
பார்த்தாலும்பீரல் உள்ளவீடு-சமைத்தெடுத்த
சோற்றால் குவித்துவைத்தமேடு- இவையறியார்
ஏற்றபடிக்கெட்டவர் ஏன்நமக்கும் அந்தக்கேடு.
(போ)

3 செட்டுச் செய்யவேண்டியதில்லை—பரதேசிகள்
சட்டிஎடுப்பதுவுந் தொல்லை-பிச்சைக்கஞ்சிக்கு
திட்டமுடன் வேணுமோகல்லை-உறங்குதற்கு
குட்டிச்சுவர்களில் உண்டுஎல்லை-ஈடுநமக்கு
பட்டினத்தில் எவரும்இல்லை-அறிவுகெட்ட
மட்டிஅறியான் இந்தச் சொல்லை-மனக்குரங்கை
கட்டிவைத்தாலும் காட்டும்பல்லை-அதைப்பிடித்த
துட்டமாம்மாயைப் பசாசைத் துரத்தித்துரத்திக்
[கொல்ல (போ)

4. சோமன் உதயம்பாடுசாயும்-எழுஞ்சூரியன்
நாமம் இல்லாமல் அறத்தேயும்-பரவெளியில்
நேமமுடன் சுழிவேயாயும்—மதியமிர்த
வாமமடை திறந்துபாயும்-தத் வாதியோடு
காமக்குரோதங்களைத் தீயும்-தீயாதுயோக
பூமிவிளையும் அருள்நேயம்-விளைந்தபோகம்
நாமேகைக் கொள்ளும்படி ஞாயம்-கிடைப்பதற்கு
சாமுன்செத்த சற்குருபாதம் சார்ந்து இருப்பதுவே
[உபாயம் (போ)

5. நொங்கும் நுரையுமாகப் பொங்கும்-காமக்கடலுள்
மூங்கும்பாவி உடலைச்சொங்கும்-சொரிசிறங்கும்
வங்கும் நமநமென்று திங்கும்-நரம்புந்தோலும்
தொங்கும்மினுமினுப்பு மங்கும்- இல்லந்துறந்த
சிங்கங்கட்கு இல்லை காணும்பங்கம்-மேனிஉயர்ந்த
தங்கமயமாய் நின்று இலங்கும்- அவர்கட்கன்றே
தங்கும்சாயுச்ய பதம்தங்கும்-நமக்கும்அதில்
பங்கும்தந்து உதவிபராபரம் அருள் இறங்கும்.
போவோம் குணங்குடிக்கெல்லோரும்-புறப்படுங்கள்
போவோம் குணங்குடிக்கெல்லோரும்.

இவ்வாறு பாடிக்கொண்டே தொண்டிமா நகரை விட்டுக் கடந்துசென்றார்கள் ஞானவள்ளல். அந்தசமயம் வீட்டில் இருந்தமைமூன் தன்னுடைய வாழ்வுநிலை இவ்வாறு ஆகிவிட்டதே என்று எண்ணி விரக்தி மனத்தோடு ஆகாயத்தை நோக்குகின்றார்.

அந்த மாதரசியுடைய கண்களுக்கு ஆகாயத்தில் மேகக்கூட்டங்களுடன் கலந்து குணங்குடியாரும்

செல்வதுபோன்ற ஒரு பிரேமைக் காட்சி தென்படு கின்றது. கண்கள் தாரைதாரையாக நீரைக் கக்கின. வாய் முணுமுணுத்தது. அந்த முணு முணுப்பில் இருந்து சோகம் நிறைந்த உள்ளம் தனக்குள் இவ்வாறு எண்ணி அழுதது.

மைமூன் மனம்:—

நான் ஒன்று நினைத்தேன்
நீ ஒன்று நினைத்தாய்-இறைவா!—என் இறைவா!!

1. மலர் என்று நான் எடுத்தேன் மணக்கவில்லை;
மலர்விழி என்றால் அதில் பார்வை இல்லை.
நலன் எவைக்கும் உன்னையே நம்பி நின்றேன்;
பலன் ஏதும் இல்லைஎன்று விடைஅளித்தாய்;
நீ விடைஅளித்தாய். (நான்ஒன்று)

2. பூப்பறிக்கும் வேளையிலே புயல் அடித்து-மணப்
பூவிருந்த சோலைஎல்லாம் பாழானதே;
வாய்ப்பெனக்குக் கிட்டும்என்றே காத்திருந்தேன்-நீ
தாய்மைஎன்று பெயர் சூட்டி மறைந்துசென்றாய்;
நீ மறைந்துசென்றாய். (நான்ஒன்று)

3. காவியத்தை முடிக்குமுன்னே கதைபறித்தாய்-இந்த
ஓவியத்தை நடுவினிலே கைவிடுத்தாய்;
நான்வளர்த்த பாசமெல்லாம் முடிவினிலே;
மான்மடுத்த கானல்வெளி நீராச்சுதே;
கானல்நீராச்சுதே. (நான்ஒன்று)

4. கல்லான இதயத்தைக் கனியவைத்தாய்-யாரும்
சொல்லாத தத்துவத்தைச் சொல்லிவிட்டாய்-மனம்

இல்லாத இடந்தேடி இருக்கவைத்தாய்-நீ
எல்லார்க்கும் நல்லவனாய் நிலைத்துவிட்டாய்;
மனத்தில் நிலைத்துவிட்டாய்!

நான்ஒன்று நினைத்தேன்
நீ ஒன்று நினைத்தாய்-இறைவா!—என் இறைவா!!

அந்த மாதரசியின் இதயம் அழுது முடித்தது. குணங்குடியாரும் வீதியில் மறைந்துகொண்டே இருந்தார். மைமூனும் தன் சுயஉணர்வு பெற்று கவலைக் குறியோடு வீட்டு வேலைகளை கவனிக்கலானார்கள்:

இல்லம் துறந்து துறவியாகச் சென்ற குணங்குடியார் சோலைகளையும் காடுகளையும் கடந்து பாசிப் பட்டணம் என்ற ஊரை அடைந்து அங்கு அடங்கி இருக்கும் செய்னூர் முகம்மது ஒலியுல்லா என்னும் பெரியாரின் சமாதியைத் தரிசித்தார்.

குணங்.—பாவா. நான் யார் தெரிகிறதா?

தாயாதிமுதல் அன்னை சுற்றங்கள் தம்மையும்
சாராது அடித்த வம்பன்;
தானதருமங்களுக்கு ஈனதருமங்களே
சாட்டிக்கொடுத்த வம்பன்;

பேயாய்பிடித்து வெறி நாயாய்க் கடித்துப்
பிடாரிபோல் அலையும் வம்பன்;
பீருநான் என்றுஉபதேசங்கள்கூறி
விலைபேசித் திரிந்த வம்பன்;

தூயமகுமூதுநபி பாதமலரைச் சென்னி
சூட்டறிவின் மோட்டு வம்பன்;

துறவெய்தல் எய்தஅடியேனும் உமை நம்பினேன்
சொன்னபடி ஆளுதற்கே.
மாயோக சித்தநெறியுள்ள நீர்பின்தொடர
வள்ளல்இரசூல் வருகவே!
வளரும் அருள்நிறை குணங்குடிவாழும்
என் இருகண் மணியே முகிய்யத்தீனே!

இவ்வாறு பாடி முடித்துவிட்டு பாசிப்பட்டணத்தைவிட்டும் அகன்றார். நேராக கோட்டைப் பட்டணம் சென்றார். அங்கு அடங்கியிருக்கும் இராவுத்தர் சாகிபு ஒலியுல்லாவுடைய சமாதிக்கருகில் நின்று,

குணங்:— பொருந்துதேடித் தேடி மேவாதபேர் எனப்
போகாதுன் அருள்புரியவும்;
பொருள்தேடி ஓடிஓடிப் போகுவோர்எனப்
போகவிட்டு அருள்புரியவும்;

எந்தை முதல் யாவரும் வந்து கலையுஞ் சந்தை
என் றென்ன வருள் புரியவும்;
எவராலும் எய்தறிய துறவோடு மற்றுளன
எளிதில் எற்கருள் புரியவும்;

கந்தையைச் சுற்றவும் கானகஞ் சுற்றவும்
கைபிடித்து அருள் புரியவும்;
கந்த மூலந்தனைத் தந்துகந் தென்றனைக்
காப்பாற்றி அருள் புரியவும்;

மந்தை வழியாயினும் தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்றன் அருகே.
மாகுணங் குடிவாழும் என் அகத்தீசனே
மவுன தேசிக நாதனே. 1

பொன்னைப் பழித்த பொதிகைச் சார்பு மீதில்
பொதும் பொன்ற அருள் புரியவும்;
பூவைப் பழித்த நின் பொன்னடியும் உன்னடிமை
பூசிக்க அருள் புரியவும்;

மின்னைப் பழித்த மனமும் சஞ்சலத்தோடு
வியாபியாது அருள் புரியவும்;
வேலைப் பழித்த விழியார் முயக்களறு தனில்
வீழ்ந்திடாது அருள் புரியவும்;

என்னைப்பழித்த நான் என்பதனை எனைவிட்டு
எடுத்தெரிய அருள் புரியவும்
எவையும் பழித்த துறவு எய்தி வெளியேறி நான்
ஈடேற வருள் புரியவும்;

மன்னைப் பழித்த மெய்த்தவ ராஜசிங்கமே
வரவேண்டும் என்றன் அருகே.
மா குணங்குடி வாழும் என் அகத்தீசனே
மவுன தேசிக நாதனே. 2

இவ்வாறு பாடி முடித்துவிட்டு அங்கிருந்து பயணித்து திரிசிரபுரம் என்ற திருச்சியை வந்தடைந் தார்கள். அவ்வூரில் மகான் சாம்சாகிபு என்ற இல்லற ஞானி ஒருவர் இருப்பதை அறிந்து அவரைக் காணு வதற்குச் சென்றார்கள். இருவரும் உரையாடினார்கள்.

சாம்சாகிபு என்பவர் ஒரு மகாமேதை எனத் தெரிந்த குணங்குடியார் அவரிடம் ஞான உபதேசம் பெற்று அவரின் சன்னிதானத்திலேயே நான்கு மாதங்கள் தங்கி இருந்தார்கள். இவர்தான் குணங்குடி யாரின் முதல் ஞானாசிரியராகும்.

ஐந்தாவது மாதம் அந்தப் பெரியாரிடம் விடை பெற்றுக்கொண்டு வெளியேறினார்கள். கால்போன வழி நடந்து முடிவில் காரைக்காயல் என்ற ஊரை அடைந்தார்கள்.

காரைக்காயலில் இருந்த ஒரு குப்பைமேட்டில் சில நாள் தங்கி இருந்தார்கள். இப்படி இருக்கும் போது ஒரு நாள் அந்த ஊரில் உள்ள முஸ்லிம்களில் சிலர் இவரை உணராமல் இவர் என்ன துறவியா? வயது இருபதுதானே இருக்கும்; சிலகேள்விகள் கேட்டு மடக்குவோம் என்று எண்ணியவர்களாக குணங்குடி யாரின் சமுகத்திற்கு வந்தார்கள்.

ஒருவர் ;—அஸ்ஸலாமு அலைக்கும்.

குண :—வ அலைக்கு முஸ்ஸலாம்.

ஒரு :—தாங்கள் யார் ?

குண :—நான் ஒரு துறவி.

ஒரு :—அதை எப்படி நம்பமுடியும்?

குண :—யார் உங்களை நம்பச் சொன்னது?

ஒரு :—தொழுகாமல் இருக்கின்ற உங்களை நாங்கள் ஒப்புக்கொள்ள முடியாது.

குண :—மனிதர்கள் மதிப்பளிக்க வேண்டும் என்று எப்பொழுதுமே நான் விரும்பாதவன்; மறைதந்த இறைவனை என்மனம் ஐந்து வேளையோடு சதாவும் தொழுதுகொண்டுதான் இருக்கிறது.

ஒரு :—சரியத்தின் சட்டப்படி நடக்கவேண்டாமா ?

குண :—வேண்டாமென்று நான் சொன்னேனா ?

ஒரு :—இப்போது அசருக்குறிய நேரமல்லவா?

குண :—ஆம் ! நீங்கள் என்ன கருத்தோடு பேசுகின்றீர்கள் ? சுற்றி வளைக்காமல் விசயத்தைச் சொல்லுங்கள்.

ஒரு :—நீங்கள் தொழவேண்டும்.

குண :—மர்ஹபா! (சந்தோஷம்) சரி. ஒலுச்செய்வதற்கு தண்ணீர் கொண்டு வாருங்கள்.

ஒரு :—இதோ வருகிறேன்.

(பிறகு தண்ணீர் கொண்டுவரப்பட்டது. குணங்குடியார் கைகால் முகம் சுத்தம் செய்துவிட்டு கை கட்டித் தொழுதார்கள்.)

கடைசித் தொழுகையிலே தன் சிரசை சுஜூதில் அதாவது பூமியில் வைத்தார்கள்; நிமிரவே இல்லை.

பல மணி நேரங்களாகியும் சிரம் உயர்த்தாத குணங்குடியாரின் மகிமை இவர்கள் மனத்திலே ஊசலாடுகின்றது. அதில் ஒருவர் மற்றவர்களை நோக்கிச் சொல்கிறார்.

ஒருவர் :—அப்பாடா ! இவர் பெரிய ஞானிபோல் இருக்கு.

மற்ருெருவர் :—ஆமப்பா! இல்லேன்ன இப்படி ஒரே யடியா கிடக்கவே முடியாது.

ஒரு :—நிச்சயமாக முடியாது; நிமிர்ந்த உடனே நாம் மன்னிப்புக் கேட்கணும்.

இவ்வாறு இவர்கள் பேசிக்கொண்டிருக்கும் போது குணங்குடியார் தலை நிமிர்த்தி சலாம் கொடுத்து கண் விழித்தார். கண்கள் இரண்டும் கொவ்வைப் பழம் போல் சிவந்து இருந்தன.

ஒரு :—பாவா! உங்களைத் தொல்லை கொடுத்ததற்கு எங்களை மன்னிக்கவேண்டும்.

குண :—ஹும்! பரவாயில்லை.

"மெத்தப்படித்த வெறும் பாசப்பித்தருக்கு
சித்தம் தெளியாது என்செய்கை. நிராமயமே!
எப்பொருட்கும் தானாய் இயங்கும்
உனைப் பூஜைசெய்ய
புட்பம் எடுக்கவும் தான் போமோ-நிராமயமே!

உள்ளுள் உருவாய் உறைந்திருக்கும்
உன்னைத் தொழ
பள்ளி அறை யேன்பகராய்-நிராமயமே!
இடம் பொருள் ஏவல்முதல் எவையும் மறந்த
குணங்குடியார்க்கு உவமை குறியே-நிராமயமே"

குண :—புகழ் அனைத்தும் இறைவனுக்கு உரியது. எனவே எனக்கு இனிமேல் இங்கு வேலை இல்லை.

என்று சொல்லி காரைக்காயிலை விட்டு வெளியேறினார்கள். வெளியேறிய குணங்குடியார் நேராக மதுரை மாநகர் வந்து சேர்ந்தார்கள். அங்கே பல நாட்கள் சுற்றித் திரிந்து வந்தார்கள்.

ஒரு நாள் வீதியில் ஓரிடத்தில் தமது பள்ளித் தோழரான காயல்பட்டணம் புலவர் நாயகம் என்று மக்களால் அழைக்கப்படும் செய்கு அப்துல் காதர் நெயினார் என்பவரைச் சந்திக்க நேர்ந்தது. குணங்குடியாரின் துறவு நிலை கண்ட அவர் திடுக்கிட்டார்; செல்வத்திலே திரண்டு உருவெடுத்தமேனி; இப்போது வாட்டமடைந்து வாடி வதங்கி இருப்பதைக் கண்டு அதிர்ந்தார்; அவர் குணங்குடியாரை நோக்கிச் சொன்னார்.

புலவர் :—என்ன தோழா இது. எவ்வளவு காலமாக இந்த தவக்கோலம்.

குணா :—கடந்துவிட்டன மூவாண்டுகள்.

புல :—"லாபாயில இல்லல்லாஹ்" எல்லாம் இறைவன் செயல்.

குணா :—விசயம் அறிந்தவர் நீர்; அதனால் அப்படிப் பேசுகின்றீர் புலவரே !

"எத்தனை எத்தனை காலம்—இந்த
என்பு தசையால் எடுக்கின்ற தூலம்
மித்தன வாழும் இஞ்ஞாலம்—என்றும்
மேவாது போவாது எடுத்து இந்தக் கோலம்

இறக்கத் துணிந்து கொண்டேனே எனக்கு
இருக்கும் குறை முழுவதும் நிகழ்த்திக்
கொண்டேனே;
என்று போய்கொண்டிருக்கிறேன் தோழா.

புல :—நாம் இருவருமே பள்ளித் தோழர்கள்; இந்த வழியிலும் தோழமைபூண விரும்புகிறேன்.

குண :—அப்படியா! உமக்கு மணமாகிவிட்டதா?

புல :—ஆம்; ஆகி மூவாண்டு காலமாகிறது. ஒரு குழந்தையும் இருக்கிறது. உமக்குக் கூட லிகிதம் அனுப்பி இருந்தேன். நீர் வரவில்லை. காரணம் இப்போது புரிகிறது.

குண :—திருமணமாகிவிட்டது. குழந்தையும் இருக்கிறது. அப்படியானால் நீர் துறவு பூணுவது சிறப்பல்ல; இல்லறத்திலே இருந்து ஆரிபுரசூலாக—இல்லற ஞானியாக வாழ்ந்து புகழ் அடைய வழியும் இருக்கிறதல்லவா? அதன்படி கடைப்பிடித்து வாழும். முக்தி கிட்டும்.

புல :—உண்மையிலும் உண்மை. உமது விருப்பத்தைச் சிரமேற்கொண்டு நடத்துகின்றேன் ஆனால் ஒன்று

குண :—என்ன?

புல :—எனக்கு ஒரு வரந்தரவேண்டும்.

குண :—வரமா! என்ன விளையாடுகிறீரா புலவரே! நான் என்ன தெய்வமா? தெய்வப் பிரவியா? வரமளிப்பதற்கு (புன்முறுவல் செய்கிறார்.)

புல :—ஆம் தோழா! பூத ஜென்மங்கள் கோடிப் புனிதனும் புருடன் நீர்; உமது வைராக்கியம் உலகில் கோடியில் ஒருவனுக்குத்தான் வரும். அரிதினும் அரிது. காரணம் —

"பேராத அன்புடைய தாய்தந்தை தந்துணைவர்
 பேராசை தந்தமடவார்
பேரான மைந்தர்புடை சூழ்சால் பெருங்கிளைஞர்
 பேரா நிறைந்த உறவார்;

ஆரார் இருந்திடினும் ஆரார் உவந்திடினும்
 ஆதாரம் ஒன்றும் இலையால்
ஆகாதவன் செயலிருளிலே யெதிர்ந்தவினை
 ஆடாது அகன்றொழியமேற்

சாராது வெம்பவமெலாம் ஓட வெங்கணிலே
 தாழாது இகம்பரமும் நீர்
தாமாக நின்றருளினுள் வீர்க ளென்றுமது
 சார்பாயடைந்த வெளியேம்;

வேராதி கொண்ட மணமார்பா விரிந்த மலர்
 விழிகருணையால் நோக்கியே
வேதா குணங்குடியின் நாதா அருந்தவ
 விநோதா புரந்தருள்கவே. 1

துதிமொழிகள் ஓயாது மனவுறுதி சாயாது
 தொழுகை நிலை மாயாது சீர்

தொடர் நியமம் ஆடாது விரதமுறை கோடாது
சுருதி நயம் வாடாதுமேல்;
குதி கொள்வினை காணுது கசடுபலபூணுது
கொடுமைவலி வேணுது வீண்
குலவு நடைபாவாது பலபொருளின் மேவாது
கொலைகளவு தாவாது நேர்;
அதிக குணமா யோக தவமுயலுமேலோர்கள்
அருமை யொடு மாருது நும்
அடியிணைகளே சூடி யினிய பலபேருண
தணிபவர்களே கோடியே!
விதிமறையினுல் ஆளும் ஒருவனருள் தானுண
விழிகருணையால் நோக்கியே
வேதா குணங்குடியின் நாதா அருந்தவ
விஞேதா புரந் தருள்கவே. 2

சுற்றிப் பிடித்தகொடி யொத்துப் பெருத்தபல
சுற்றத்தர் மற்றுளர்களும்
துக்கச் சுகித்துடை யுடுக்கத்தரிக்க நகை
சுட்டுத் தடுத்திடுத லால்;
பற்றித் தொடத் தொடுமுன் எய்த்துப் பசப்பும் எழில்
பச்சைக்கிளிக் குதலையார்
பட்சத் திடத்துயிர் திகைப்பச் செறுத்தறிவு
பட்டுப் புறப்படுதலால்
எற்றித்தவத்தினை முறித்துக் கருத்தினை
யெடுத்துக் குலப்பகையை மேல்
எட்டிப் பிடிக்க மதியற்றுப் பவத்தொழில்
இழைத்துப் பிழைத்து ழல்வரே;

வெற்றிக் குணக்குரிசில் எத்திக்கு மெய்ப்ப நிறை
விழி கருணையால் நோக்கியே
வேதா குணங்குடியின் நாதா அருந்தவ
விநோதா புரந்தருள் கவே. 3

மனுநீதி யுணராத பெருமூடர் சதியோர்கள்
மரியாதை தெரியாதவர்
மதிவேறு மொழிவேறு பொருள்வேறு படுவோர்கள்
மலிகோர நிறை நாவினர்

சினமூறு மனமாய மறியார்கள் குறியாத
சிறியோர்கள் வெறியாள்பவர்
திருமாது பகையாளர் மலர்மாது வசையாளர்
திறமாது மறமாள்பவர்

துவிசேரு நடையாளர் பெரியோர்கள் அடையாளர்
துயர்வாழும் இடையாளர்கள்
தொழுதாலும் அகலாத கெடுபாவம் உடையோர்கள்
சுகமேது பெறுவார்களோ!

வினவாத வினையாவும் ஒருபோதும் அணுகாமல்
விழிகருணையால் நோக்கியே
வேதாகுணங் குடியின் நாதா அருந்தவ
விநோதா புரந்தருள்கவே. 4

வண்டனைச் சண்டனைக் கொடியனைக் கடியனை
வாதாடு மொழிகேடனை
வஞ்சனைப் புஞ்சனைக் கோபியைப் பாபியை
மாபாதகத் தொழிலனை

மிண்டனைக் கண்டனைக் கதியனைக் கொதியனை
வீணான வீணாளனை

வெஞ்சனைக் கொஞ்சனைக் கொலையனைப் புலையனை
வேகா வருங்கள்ளனை

அண்டனைக் கண்டனைத் தண்டனைத் தொண்டனை
ஆகாத புன்செயலனை
ஆதியின் இடந்திரந் தன்பினேடு என்பிழை
அகன்ருழிய வருள் புரிகுவீர்

விண்டலமும் மண்டலமும் எண்டிசையு மண்டுபுகழ்
விழிகருணையால் நோக்கியே
வேதா குணங்குடியின் நாதா அருந்தவ
விநோதா புரந்தருள்கவே. 5

(இவ்வாறு பாடி முடித்த புலவர் கூறினர்.)

புலவர்:—உம்மை நண்பனுகப்பெற்ற யாஹும் ஒரு நற் பிறவிதான்; நண்பா! எனக்கு ஒரு வரம் தர வேண்டும் என்று கேட்டேனே அது என்ன தெரியுமா? (சோகம்) உம்மோடு கூடவருகின்ற பாக்கியத்தைத் தட்டிக் கழித்துவிட்ட நீர் உம்மோடு மரணிக்கின்ற பாக்கியத்தையாவது கொடும். நீர் எங்கே சமாதியாக விரும்பு கின்றீரோ அங்கே, அந்தப் புனித மண்ணிலே உமது பக்கத்தில் எனக்குக் கொஞ்சம் இடம் போட்டு வையும். பள்ளியிலே இணைந்து இடை யிலே பிரிந்து நடுவிலே கண்டு உரையாடிய நீவிரும் நானும் முடிவிலே மண்ணறையிலும் நண்பனுகவே இருப்பதற்கு வரந்தாருப்; நான் எங்கிருந்தாலும் முடிவில் அங்கு வந்து சேர்ந்து விடுகிறேன் நண்பா! (கண்கலங்கி விட்டது.)

குண:—(கலங்கிய கண்களோடு) தோழா! நீர் எல்லை கடந்துவிட்டீர்; உமது உள்ளம் அல்லாவுடைய வீடாக இருக்கும். நிச்சயம் உமது நாட்டப்படியே நடக்கும்; நீர் வந்து தான் என்னுடைய சடலத்தையும் அடக்க வேண்டும். அதுவரை நாளும் காத்திருப்பேன். சரிதானே? (தோளில் தட்டிக் கொடுத்து) நண்பரே எனக்கு நேரமாகி விட்டது. நான் மலையடிவாரம் செல்லவேண்டும். நான் வரட்டுமா?

புல:— அஸ்ஸலாமு அலைக்கும்.

குண:— வஅலைக்குமுஸ்ஸலாம்

(பிறகு நேராக மலையடிவாரம் நோக்கி விறுநடை போட்டார் குணங்குடி மஸ்தான். இது நடந்தது. கி. பி. 1810-ல். அப்போது குணங்குடியாருக்கு வயது 20.)

மதுரைச் சதுரகிரி மலையிலும், யானைமலையிலும், புருமலையிலும், நாக மலையிலும் பத்து வருடங்கள் தனித்து முற்றுந்துறந்த முனிபுங்கவராய், பற்றற்ற பரமயோகியாய், ஏகாக்ர சித்தனாய், வைராக்கிய மனத்தினனாய், இருவினை நீக்கி, மும்மலமகற்றி, இடும்பை செய் பொறிபுலனீத்து, முப்பகை எறிந்து, பாதகம் ஏழையும் பசையறப் பறித்து, தவத்துறுப்புகள் எட்டையும் மேவி, இரதம் ஒன்பதில் எடுப்பன எடுத்து, விரதம் பத்தையும் விளங்கிய துறவியாய் தவஞ்செய்து, இருளடைந்த பெரிய காடுகளிலும் விலங்காடிய பயங்கரமான பொதும்புகளிலும் பொழி

நதிக்கரைகளிலும் பலகாலம் சுற்றித் திரிந்து இலை சருகு கந்தமூலங்களை ஆகாரமாகப் புசித்துக் காலங் கடத்தி வந்தார்கள் நமது குணங்குடிமஸ்தான்சாகிபு அவர்கள்.

ஒருநாள் மாலை குணங்குடியார் வெளியே சென்று மீண்டும் மலைக்குகை நோக்கி வந்துகொண்டிருந்தபோது அந்த மலையின் ஓர் பகுதியில் ஒரு ஆண் உருவம் மயக்கத்தோடு கிடந்தது. இதைக்கண்ட அவர் உற்று நோக்கினர். படுத்திருந்த ஆள் அரச உடையோடு காணப்பட்டார். உடனே குணங்குடியார் அவரைத்தூக்கித் தோளில் போட்டுக் கொண்டு தனது குகைக்குள் வந்து முகத்தில் தண்ணீர் தெளித்து மயக்கந் தெளிவித்தார். தெளிந்த அந்த மனிதன் தாடியுள்ள இந்தத் துறவியை நோக்கினர். பிறகு கேட்டார்.

மனிதன்:—நீங்கள் யார்?

குண:—நான் ஒரு துறவி நீர் மயங்கிக் கிடந்தீர். தெளியவைத்தேன். ஆமாம்! நீர் யார்?

மனிதன்:—நான்மைசூர் மன்னன். யுத்தம்புரிந்துவிட்டு சுரங்க வழியாக வந்தேன் மயக்கம் வந்துவிட்டது.

குண:—யுத்தம். ஹூம்! உயிரினங்களைக் கொல்வதிலே உங்களுக்கெல்லாம் ஒரு அலாதியான விருப்பம்; சேச்சே என்ன மனப்போக்கு.

மன்னன்:—யுத்தம்புரிவது அரசின் கடமையல்லவா துறவி!

குணங்—யார் சொன்னது? தர்மயுத்தம் புரிவதுதான் கடமை. ஆனால் நீங்கள் புரிவதோ நாடுபிடிக்கும் யுத்தமல்லவா? இது எப்படி தர்மயுத்தமாகும்?

மன் : — தர்மயுத்தத்திற்கும் அதர்மயுத்தத்திற்கும் விளக்க மென்ன?

குண ;—நிம்மதியாக வாழ்ந்து கொண்டிருக்கின்ற ஒரு நாட்டை அநியாயமாகத்தாக்குவது அதர்ம யுத்தம். நீதியான ஒரு நாட்டை ஒரு அநியாயக் காரன் தாக்கினால் அந்த நல்லமக்களைக் காப்பதற் காக அக்கிரமக் காரனை எவ்வகையிலும் அழித் தொழிப்பது தர்மயுத்தம்.

மன் :— அருமையான விளக்கம். அரசியல் மேதையாக இருக்கும் தாங்கள் எனது நாட்டுக்கு வந்து விடுங்களேன்?

குணங்:—எது உன்னுடைய நாடு?

மன் :—மைசூர்.

குணங்:—கிடையாதே!

மன்:—யார் சொன்னது? (ஆவேசம்)

குண:—அதெப்படி உன்னுடையதாக முடியும்? என்னுடு உன்னுடு எங்கே இருக்கிறது? எல்லாம் பின்னடித் தெரியும்.

கொடிகட்டிக் கொண்டெழு கோடி—தனம்
குவித்து அந்தமகிழ்ச்சியால் கூத்துகள் ஆடி
கெடுபுத்தி உடையோரைக்கூடி—யானும்
கெட்டு அலையாமலே கதிபெறநாடி.

மாளிகைமேல் வீடுகட்டி—மனை
வாழ்வைசத மென்று வாழ்கின்றமட்டி
நாளை எமன்வந்து அதட்டிக்—கொண்டு
நடப்பான் என்று அறியானை அடுப்பதைவெட்டி
இரக்கத்துணிந்து கொண்டேனே எனக்கு
இருக்கும் குறைமுழுதும் நிகழ்த்திக்கொண்டேனே.

இந்த பூமியை ஆட்சி புரிந்தவர்களும் இனிமேல் ஆள்பவர்களும் எத்தனை எத்தனை கோடியோ! மன்னா! உன்னையே நீ எண்ணிப்பாரு. நாமே நமக்குச் சொந்தமல்ல.

மன்னன்:—இதுவரைத் துறவிகளையே வெறுத்து வந்த நான் இன்றுமுதல் மதிப்போடு அதுபற்றி சிந்தனை செய்வேன். என்னால் தங்களுக்கு ஏதும் ஆகவேண்டியது இருந்தால் அதற்காக என்றும் சித்தமாயுள்ளேன்.

குணங்:—மகிழ்ச்சிமன்னா! தூலத்துள் இச்சையைத் தொலைத்து ஞாலமும் ஆலமும் ஒன்றெனக் கருதுகின்ற என்போன்றவனுக்கு உபயிடம் வேண்டுவது எதுவுமே இல்லை. ஆனால் ஒரே ஒருகைம்மாறு நீர் எனக்குச் செய்யவேண்டும். குடிமக்களை எம்மதத்தவராக எச்சாதியினராக இருந்தாலும் சமநோக்கோடு பார்த்து அவர்கள் நாட்டில் நிம்மதியோடு வாழ்வதற்கு வறுமையை ஓட்ட வழியைத்தேடு. அப்போது உன்னாடு செழிக்கும். உன்நாமமும் நிலவுலகில் நிலைத்து வாழும்.

மன்னன்:— அப்படியே செய்கிறேன். போய்வருகிறேன் துறவி.

குணங்:—நல்லது. (இருவரும் பிரிகின்றனர்) (இவ்வாறு அந்தமலைக் குகையிலே குணங்குடியார் பத்து ஆண்டுகளைக் கடத்தினார். ஒருநாள் குகையை விட்டு வெளியேறி வேறுதிசை நோக்கிச் செல்வதற்கு அவர்மனம் நாடியது. இப்போது குணங்குடியாருக்கு வயது 30)

குகையில் இருந்து வெளியேறிய நமது குணங்குடியார் பல ஊர்கள் கடந்து பலகாலம் சுற்றி இறுதியாக தஞ்சை மாநகரம் வந்துசேர்ந்தார்கள். அன்று இரவு தஞ்சையில் உள்ள ஒரு சாவடியில் தங்கினார்கள். அந்தச் சாவடியில் பல சன்னியாசிகளும் தங்கி இருந்தார்கள். அவர்களோடு குணங்குடியார் ஒன்று சேராமல் அந்த இடத்தில் ஒதுங்கி அமர்ந்திருந்தார். இதைக் கவனித்த அந்த சன்னியாசிகளில் இருவர் இவரை அணுகி விசாரிக்கிறார்கள்.

துறவி,—சுவாமிகளுக்கு எந்த ஊரோ?

குணங்:— வெளியூர்.

துறவி:—அது தான் புரிகிறதே; ஆனால் சொந்தவூர்?

குணங்:—வந்த ஊர் தான்.

துறவி:—ஏது, குறும்பர் போலிருக்கிறதே?

குணங்:—உண்மைதான் சொன்னேன்; உணருவது உமது கடன்.

**துறவி:**—அப்படியா! (வந்த இருவரும் வெறுப்புடன் செல்கிறார்கள்)

(குணங்குடியாரோ புன்சிரிப்போடு இருக்கிறார்)

[அந்தக் கோவிலுக்கு மாதம் ஒருமுறை அரசன் வருவது வழக்கம். வந்து செல்லும்போது துறவி களிடமும் குசலம் விசாரித்துச் செல்வது பழக்கம். ஒருநாள் மன்னன் கோவிலுக்குவருகிறார். அங்கே ஒரு திண்ணையில் குணங்குடியார் ஒருக்கணித் துச்சாய்ந்து கொண்டிருக்கிறார். அப்பக்கம் அரசன்வந்தான். குணங்குடியார் எழுந்திருக்க வில்லை. இதைப்பார்த்த அரசன் சற்று நிதானித்து விட்டு பழையசன்னியாசிகளிடம் வந்தான்; அவர்கள் அரசனைக்கண்டதும் எழுந்து மரியாதை செலுத்தினார்கள்; அரசன் அவர்களை நோக்கிக்கேட்கிறான்.]

அரசன் : — அதோவீற்றிருக்கும் அந்தவாலிபத்துறவி யார்?

துறவி:—தெரியவில்லை- எங்களோடும் ஒட்டுவதில்லை; ஏதோதிட்டமிட்டுச் செயல் புரிகிறவர் போல் படுகிறது.

**அரசன்:**—அப்படியானால்?

துறவி:—சும்மா! அதெல்லாம் ஏட்டுச்சுரைக்காய் அரசே.

**அரசன்:**— நம்பமுடியாது. ஆனால் போலிகளுக்கு எனது நாட்டில் இடமில்லை.

துறவி:—போறான்மன்னு! பாவம்! பிழைக்கட்டும்!

அரசன் : — சேச்சே; வேடதாரிகளை ஆதரிப்பதே ஆபத்து; கண்டிப்பாகச் சோதனை செய்தே ஆகவேண்டும்.

துறவி;—தங்கள் சித்தம்.

அரசன்:—நாளை சோமவாரம். உங்களுக் கெல்லாம் அரண்மனையில் விருந்து; மறக்காமல் வந்து விடுங்கள்.

துறவி;—முன்கூட்டியே வந்துவிடுகிறோம்.

(அரசன் அவ்விடத்தைவிட்டு அகன்று நேராக குணங்குடியார் இருப்பிடம் வருகிறான்)

அரசன்:—வணக்கம் சுவாமி!

குணங்:—வந்தனம்.

அரசன்:— தாங்கள்?

குணங்:—நான் ஒரு பரதேசி. நீர் யாரோ?

அரசன்:—நான் இந்த நாட்டு மன்னன். கொற்றம் தழைக்க ஆசீர்வதியுங்கள்.

குணங்:—நெறிவாழ்க்கை நடத்து. குறைவின்றி வாழ்வாய்.

அரசன்: —நாளை என் அரண்மனைக்கு எழுந்தருள வேண்டும்.

குணங்;—நான் அதையெல்லாம் விட்டவன்.

அர:—இது கட்டளையல்ல சுவாமி! என் வேண்டு கோள்.

(இச்சமயம் குணங்குடியார் அரசன் முகத்தையே கவனித்துவிட்டு)

குணங்;—சரி வருகிறேன்.

அரசன்:—நல்லது. (அரசன் செல்கிறான்)

(மறுநாள் தஞ்சை அரண்மனையில் கோலாகலத்துடன் விருந்து நடக்கிறது. பழைய சன்யாசிகள் பலர் வயிறு புடைக்கச் சாப்பிடுகிறார்கள். குணங்குடியாரும் பேருக்குக் கொஞ்சம் சாப்பிட்டுவிட்டு ஒதுங்கி விடுகிறார். உணவருந்தி முடிந்ததும் அவையில் யாவரும் அமர குணங்குடியாரும் அங்கொரு ஆசனத்தில் அமருகிறார். சற்றுநேரத்தில் அழகேஉருவெடுத்த தங்கச்சிலை போன்ற இரு நங்கையர்கள் வந்து நடனமாடுகிறார்கள். அபார நாட்டியம்; பார்ப்பவர்களெல்லாம் வாய்பிளந்தே உட்கார்ந்திருந்தார்கள். குணங்குடியாரோ நடனத்தையே இமைகொட்டாமல் பார்த்துக் கொண்டிருக்கிறார். இதைக் கவனித்த ஒரு சன்யாசி குணங்குடியாருக்குச் சமீபமாகவந்து)

சன்;—ஆட்டம் எப்படி?

(ஆனால் குணங்குடியாரோ ஒன்றுமே பேசாமல் கற்சிலைபோல் ஆட்டத்தையே நோட்டமிட்டுக் கொண்டிருந்தார். இதைக்கண்ட அந்த சன்யாசி ஆட்டக்காரியின் அழகிலே குணங்குடியார் மூழ்கி விட்டதாக எண்ணி அவருடைய தோள்பட்டை அருகில் முகத்தைவைத்து)

சன்:—அற்புதமாக இல்லையா?

குணங்:—ஆம்! ஆஹா!! உலக உற்பத்தியே அங்கே தான் தங்கி இருக்கிறது.

சன்;—அப்படியா! (இச்சமயம் சன்யாசி ஆடுகின்ற பெண்களைப் பார்க்கிறார். உடனே திடுக்கிட்டார்.)

(ஒன்றும் பேசமுடியாமல் குணங்குடியாரை ஒரு முறை நன்றாக ஏறெடுத்துப்பார்த்து கைகூப்பி வணங்கி அவ்விடத்தை விட்டகன்றான். முதல் சன்யாசி பதட்டத்துடன் போய் உட்காருவதைக் கண்ட மற்றொரு சன்யாசி)

2-வது சன்:—ஏன் பதட்ட மடைகிறீர்?

1-வது சன்;—அதை நான் சொல்வதற்கில்லை; நீர் வேண்டுமானாலும் அவருடைய தோளில் முகம் வைத்துப்பாரும். (இதைக்கேட்ட அந்த சன்யாசியும் அவ்வாறேசென்று பார்த்துவிட்டு ஆச்சரியத்துடன் குணங்குடியாரை வணங்கிவிட்டு தனது ஆசனத்தமர்ந்தார். இவ்வாறே எல்லா சன்யாசிகளும் பார்த்து நடுக்கத்துடன் அமர்வதை அரியாசனத்தில் இருந்து அரசன் கவனித்தான்; ஒன்றும் புரியவில்லை. குணங்குடியாரோ சிலைபோல் வீற்றிருந்தார்கள். அரசன் சன்யாசிகளை நோக்கி)

அரசன்:—என்ன சுவாமிகளே பதட்டம்?

சன்:—அந்தக்காட்சியை நீங்களே கண்டு மகிழுங்கள் அரசே!

2.வது-சன்:—ஆம்; சொன்னால் புரியாது. பார்த்தால் புரியும்! (அரசன் எழுந்து குணங்குடியாருடைய

சமீபத்தில் சென்று முகம்வைத்துப் பார்த்தான்; அவ்வளவுதான்)

அரசன்:—ஆஹா! ஆஹா!! (என்றான். கண்கள் அகல விரிந்தன அந்த அற்புதக்காட்சியை அரசன் பல முறைகள் கண்டுகளித்தான். அங்கே சொர்க்கம் போன்று அலங்கரிக்கப்பட்ட ஒரு இடத்தில் உலகமாதாவான ஜகன்மாதா நர்த்தனமாடுவது போன்று அரசனுக்குப் புலப்படுகின்றது. அங்கே குணங்குடியாருக்கு ஒரு ஆசனமளிக்கப்பட்டிருக்கிறது. அதில் அவர் அமர்ந்து கொண்டு ஆட்டத்தை அனுபவிக்கின்றார். இந்த உன்னதக்காட்சியைக் கண்ட மன்னன் மெய் பதறி அங்கே தெரிகின்ற குணங்குடியாரையும் இங்கே இருக்கின்ற குணங்குடியாரையும் மாறி மாறிப்பார்க்கின்றான். அங்கே உயிர் இருக்கிறது. இங்கே உடல் இருக்கிறது! உடனே மன்னன் மரியாதையோடு குணங்குடியாரைநோக்கி)

அரசன்;—முனிவர் தலைவா! என்னை மன்னித்தருள வேண்டும். (என்று கூறி குனிந்து பாதந்தொட்டான்; அவ்வளவுதான்! குணங்குடியாருக்கு மெய்சிலிர்த்தது; ஆட்டமும் நின்றது. உறங்கி விழித்தவர்போல் உணர்வடைந்து அவையை நோக்கினார். அரசன் தன்பக்கத்திலே நிற்பதைக் கண்ட குணங்குடியார்)

குணங்:—பெருமகிழ்ச்சி மன்னா! வாலை மனோன்மணியின் ஆட்டத்தை மனங்குளிரக்கண்டு களித்தேன்.

அர:—சித்தர் தலைவருகிய உங்களை சோதிக்க எண்ணியது மா பெரும் பிழைதான்!

குணங்;—சோதனையா! அதுவும் கலையிலா சோதனை! இந்த உலகமே கலையிலே பிறந்து கலையிலே வாழ்ந்து இறுதியில் அந்தக்கலையிலேயே மடிகின்றது மன்னு!

அர;—அப்படியானுல் கலையில் மனிதன் மயங்கி உழல்கின்ருனே?

குணங்:—உண்மைதான்! ஆனுல் மயக்கத்திலும் இரண்டுவகையுண்டு. அதிலே காமுகன் மயக்குண்டு நிலை தடுமாறிக்கெட்டழிந்து சாகின்ருன். அறிவுள்ளவன் கலையை கருவூலப்பொருளாக மதித்து அனுபவித்து வாழ்கின்ருன். அந்நிலை அவன் மனம் உழல்வதில்லை. இதுதான் உண்மை.

அர;—ஆஹா! அருமை அருமை!! அறிவுக்கடலே! ஞானக்களஞ்சியமாகிய உங்களைப் பரீட்சிக்க எண்ணியதற்கு மனம்பொறுத்து ஆசீர்வதியுங்கள்.

குணங்:—என்ன பரீட்சை மன்னு! எதற்காக!! புரியச்சொல்லு.

அர:—பொய் வேடந்தரித்த போலிச்சாமியாராக இருக்குமோ என்று வாலிபத்துறவியாகிய உங்களைப்பற்றிச் சில சன்யாசிகள் அபிப்பிராயப்பட்டார்கள்.

குணங்;—காரணம்?

அர;—நீங்கள் அவர்களோடு ஓட்டாமல் வாழ்ந்தது தான்.

குணங்:—அது என் விருப்பம், 'இல்லாளும் மைந்தரும் சுற்றமும் சுத்தமாய் இல்லை என்பது சமாதி என்றும் செத்தசவமதுபோல இருந்து ஜெபதபமும் செய்யத்தனிப்பது சமாதி என்றும் உறுதியான முடிவுக்கு வந்தவன் நான். எப்படி ஒட்டிவாழ முடியும்?

அர:—இதனாலேயே சந்தேகமெழுந்து அதன் காரணமாகவே இந்த ஏற்பாடு நடந்தது.

குண;—சந்தேகம் சனியனுச்சே. (துறவிகள் பக்கம் திரும்பி) துறவிகளே!

எமனுர் விருதுஎனும் பாசக்கட் டறுத்தோர்
நமனுர்தமக்கு நமன், என்று புரியாதா உங்களுக்கு
உத்தமர்கட் காகா உலுத்தப்புலேரென்னும், பித்தர் நெறியினரா நீங்கள்!
முத்திதரும் வேதம் மொழிந்த வழி நடக்கப்
பெற்ற குருவென் பிணைகான்;
வஞ்சம் அழிந்து வரும்பாசம் விட்டொழித்தோர்
நெஞ்சம் தெளிய நெறி நிற்பார்;
அமையாமனம் அமைந்து அருட்கடிமைபட்டவரை
எமனுலும் என்ன செய்ய முடியும்?

சிந்தைக் கலக்கம் சிதறிவிடச் செய்வதுவே
எந்த தவத்திினும் நன்று.

வேதச்சுமையதனை வீம்புக்கெடுத்த உடல்
மாதவத்திற்கு எங்கே வளையும்?
எத்தனையோ கற்றும் இதயந் தெளியாதிருந்த
பித்தருடன் நேசம் பிழை காண்!
பித்தனென்றும் பேயன் என்றும் சின்னஞ்
[சிறியனென்றும்
முத்தர்க்கு இருக்கும் முறையல்லவா?
செத்த சவமென்றும் சின்னஞ்சிறிய ரென்றும்
முத்தர்க்கும் இருக்கும் முறைதானே?
சிவராஜயோகந் தெளிந்த திறத்தினர்க்கு
எவரைச் சரியிடுவது?
கூறும் அவத்தைக் குணங்குடியோம்
அன்பருக்கு யாரை நிகரிடுவதையா!

அதிலும் கேவலம்! இந்தப்பரீட்சையா? ஹும்!! (சற்று மனவேகத்தோடு சன்னியாசிகளை நோக்கி குணங்குடியார் பாடுகிறார்.)

குணங் :—

மீசையுள்ள ஆண்பிள்ளைச் சிங்கங்கள்
என்கூட வெளியினில் வாருங்கள் காணும்;
நாசி நிரம்பவும் மயிர்தான்; இரண்டு கால்
நடுவிலும் ஒருகூடை மயிர்தான்;
ரோஷங்கெடுவார்கள் என்கடை மயிர்தான்;
குணங்குடி கொண்டால் என் உயிர்க்குயிர் தான்.

மடையரெல்லாம் கூடி கூத்தாடிக் கூத்தாடி
வையாளி போட்டாலும் போடட்டும்;

இன்னும் விடிய விடியவும் பரத்தையர் மடிகளில்
விளையாடினும் விளையாடட்டும்;
கள்ளுக்குடியர் எல்லாம்கள்ளைக் குடித்துக்
குடித்தவர்கள்
குடிகெட்டுப் போனாலும் போகட்டும்.
ஞானம்படியாரெல்லாம் என்னைப் பழித்துப் பழித்துக்
கொண்டு
பகைத்தார் பகைத்துக்கொண்டு சாகட்டும்.
அந்தக் கெடுவார்கள் என்கடை மயிர்தான்;
குணங்குடி கொண்டால் என்னுயிர்க்குயிர்தான். 1

நெடுமரம்போல் ஓங்கி வளர்ந்தும் அறிவற்றவர்
நெருப்புண்ணப்போனாலும் போகட்டும்; அவர்
இடுகுட்டிச் சுவரைப்போல் இருந்தென்ன இறந்
தென்ன
எப்படிப் போனாலும் போகட்டும்; இன்னும்
கொடும்பும் இடும்பும் வம்பும் குடிகேடுங்குடிகொண்டு
கூத்தாடினாலும் கூத்தாடட்டும். என்னை
மடியிற்கை போட்டிழுத்து அலகினிலடிபோட்டு
மல்லாடினாலும் மல்லாடட்டும்.
அந்தக் கெடுவார்கள் என்கடை மயிர்தான்;
குணங்குடி கொண்டால் என்னுயிர்க்குயிர்தான். 2

படிக்கும்படி நடக்கப் படிக்காலோபிகள்
மோச்சப்பத மற்றுப்போனாலும் போகட்டும்;
அவர் முடிக்கு முடிதரித்து முடியமுடிய வாழ்ந்து
முடிந்து முடிபோனாலும் போகட்டும்; இன்னும்
குடிக்கக் கஞ்சியுமற்றுக் குண்டிக்குத்துணியற்றுக்
குருடராய்ப் போனாலும் போகட்டும்;

என்னை அடித்தாலும் எலும்பெல்லாம் ஒடித்தாலும்
அவர்க்கஞ்சேன்
அடித்தால் அடித்துக் கொண்டுசாகட்டும்;
அந்தக்கெடுவார்கள் என்கடைமயிர்தான்;
குணங்குடிகொண்டால் என்னுயிர்க் குயிர்தான். 3

(இவ்வாறு பாடி முடித்து)

குணம்:—வயிற்றுப் பிழைப்புக்காக எத்தனையோ வழிகள் இருக்க, அதற்கு இந்தக்கோலமா தேவை? சேச்சே!

கும்பிக்கிறைதேடிக் கொடுப்பார் முகம்பார்த்துச்
சம்பித்திரிபவன் நானல்ல· துறவிகளே.

(இச்சமயம் ஒரு பெரிய சன்யாசி எழுந்து)

சன்;—மன்னித்தருளுங்கள் முனிவா!

குண:—வேண்டியதில்லை. உங்களையே நீங்கள் திருத்திக் கொள்ளுங்கள். அதுவேபோதும்.

(அரசன் பக்கம் திரும்பி) நான் போய்வருகிறேன் மன்னு!

மன்:—சித்தமிருந்தால் இந்த மாளிகையிலேயே தங்கி விடுங்களேன் சுவாமி.

குண:—வேண்டாம்.

மாளிகைமேல் வீடுகட்டி
மனைவாழ்வைசதமமென்று வாழ்கின்றமட்டி

நாளை எமன்வந்து அதட்டிக் கொண்டு
நடப்பானென்று அறியாளை அடுப்பதை வெட்டி
இரக்கத்துணிந்து கொண்டேனே எனக்கு
இருக்கும் குறை முழுதும்நிகழ்த்திக் கொண்டேனே.

எனவே இந்த வாழ்விற்கும் எனக்கும் வெகு தூரம். (கனிவோடு) அரசே! உன் தஞ்சை நாடு பஞ்சமில்லாமல் வாழும். நீதி செங்கோல் நடத்து. நான் போய்வருகிறேன். (என்று கைகுவித்துவிட்டு அரசனின் மறுமொழியை எதிர்பார்க்காமல் வெளியே செல்கிறார்; தஞ்சைமா நகரத்து வீதிவழியாக குணங்குடியார் இனிமையாகப் பாடிக்கொண்டே செல்கின்றார்கள்)

குணங்:—நடனமிடு வாசிதனில் ஏறிவருவார்கோடி
நாடாளுமன்னர் கோடி
நாதாந்த மூர்த்தியர்கள்கோடி நன்மவுனகுரு
நாதாக்கள் கோடி கோடி.
திடஞானவைராக்யவான்கள் பலகோடி
நல்திவ்ய குணவான்கள் கோடி
சிந்தையறநீக்கு திறமிக்க ஒருமிக்குநிலை
சென்ற நிலையோர்கள் கோடி
செடிகாடு தனில்உறைந்து இலைசருகுபட்சணம்
செய்து அலைந்தோர்கள் கோடி
தேவரீர்சீடர் அடியேனும் உமைநம்பினேன்
தீட்சைதந்தாளுதற்கே.
மடலவிழ் மலர்பாதமுள்ள நீர்பின்தொடர
வள்ளல் இரசூல்வருகவே!
வளரும்அருள்நிறை குணங்குடிவாழும் என்
இருகண் மணியே முகிய்யித்தீனே!

நாசமாம்மோச துன்பங்கள் தரும் சம்பத்தை
நழுவவிட்டவர்கள் கோடி
நாரிஎன்னும் தூண்டிலின் மச்சமாகாத
நடனஉல்லாசர் கோடி
ஆசைக்கடன்மீதில் ஓடிஅக்கரை காணும்
அக்கரைக்காரர் கோடி
அவ்வருகும் இவ்வருகும் எவ்வருகும் முந்திவந்து
ஆடிவருவார்கள் கோடி
தேஜோமயானந்த ஜெயவீர ஆண்பிள்ளைச்
சிங்கங்கள் கோடி கோடி
தேவரீர் சீடர் அடியேனும் உமைநம்பினேன்;
தீட்சை தந்து ஆளுநற் கே!
வாசம் எவையினும் வாசமுள்ள நீர் பின்தொடர
வள்ள இரசூல் வருகவே!
வளரும் அருள் நிறைகுணம் குடிவாழும் என்
இருகண் மணியே முகியித்தீனே!

(பல்லவி)

அதிமோகத் திருநடனம்புரிந்தான் எங்கள்
ஐயன் குணங்குடியான்–

அனுபல்லவி

அதிமோகத் திருநடனம் புரிந்தான் ஐயன்
ஆர்க்கும்தெரியாதென்றன் மூக்குமுனைக்குமேல்
நின்று (அ)

சரணம்

கஞ்சிலிகளைப்போலுங்காலிற் சதங்கை தொட்டு
கானல்மயில்போல் நின்றுகளித்து நடனமிட்டு

வஞ்சியர்க்கு ஆளாக்கவரும் மூவாசையை விட்டு
வஞ்சநமனைக்காலால் உதைத் தொருகான்மட்டு
மடித்துக்கொண்டு எனைக்கையில் பிடித்துக்கொண்டு
அருண்முறைபடித்துக் கொண்டு உளத்தன்பு
[துடித்துக்கொண்டு (அ)

முத்திக்கு எதிர்நின்று முச்சுடரும்பம்பரமாட
மோகமணி மாலைபொன்முலைமேற் பின்னலுமாட
வகுத்தபரஞ்சோதி நின்று அருகிற்பாய்ந்து பந்தாட
வாலையம்பிகை காலைமடித்து நடனமாட
வடித்துக்கொண்டு அமிர்தத்தைக் குடித்துக்
[கொண்டு
ஆனந்தம் படித்துக்கொண்டு அடிக்கடி நடித்துக்
கொண்டு (அ)

பஞ்சரிக்கும் பல மறைகள் தாளங்கள் போடப்
பரிபூரணானந்தம்படிந்து மத்தளம் போடக்
கொஞ்சுமனவாசியும் கொஞ்சிவையாளிகள் போடக்
கோலாகலங்கள்பாடிக் கூத்துமேற்கூத்துகள்
[போடக்
குதித்துக் கொண்டு அவன்தன்னை மதித்துக்
[கொண்டு
அருள்தன்னைப்பதித்துக் கொண்டு எனைவாழ்த்தித்
[துதித்துக்கொண்டு. (அ)

கலச நிறையமிர்த கதிருமிழ் மதிப்பாலைக்
கலகலெனவே பூட்டிக்கலை தீர்க்கமணிமாலை
மலைபோல் எழுந்துவந்து மகிழ்ந்து இந்தப்பையன்
[மேலே
மாருக்கருணைவைத்து வைத்துத்தலை மேற்காலை

மடித்துக்கொண்டு அவன்பல்லைக் கடித்துக் கொண்டு
எமன் கையையொடித்துக் கொண்டு மெய்த்தவம்
[முடித்துக்கொண்டு
அதிமோகத் திருநடனம் புரிந்தான் எங்கள்
ஞாயன் குணங்குடியான்.

(இவ்வாறு பாடிக்கொண்டே தஞ்சையை விட்டு வெளியேறி பல நாட்கள் கடந்து வடதிசை மேவி அஜ்மீர் ஷரீப் என்ற ஊரையடைந்து அங்கு அடக்கமாகி இருக்கும் ஹாஜா முயீனுத்தீன் ஜிஸ்தி என்ற மகானைத் தியானம் செய்து பாடுகிறார்).

குறள்:—

௧. சிக்குலாவுபடவார்களைக் கொஞ்சிக்
குலாவாதுனை ருள் புரியவும்;
குஞ்சங்குழந்தையும் கஞ்சிக்கு எனையோட்டி
கொள்ளாதுனை ருள் புரியவும்;
ஆசைப்பெருங்கங்கை நீந்தியக்கரை காணும்
அக்கரைக்கருள் புரியவும்;
ஆளாக ஒட்டாத பாழாசை பாழாகி
ஆளாக அருள் புரியவும்;
தேசிகா நின் திருச்சமுக தரிசனமாய்ச்
சிறப்புடன் அருள்புரியவும்;
செல்வம் பொழிந்தடிமை உல்லாசமாய் நின்று
சீராடவருள் புரியவும்;
வாசங்கொழிக்க மெய்த்தவராஜ சிங்கமே!
வரவேண்டுமென்றன் அருகே!
மாகுணங்குடிவாழும் என் அகத்தீசனே!
மவுனதேசிகநாதனே!

(இவ்வாறு பாடி முடித்து தரிசனை பண்ணிவிட்டு அங்கிருந்து புறப்பட்டு குல்பர்கா என்ற ஊரை யடைந்தார்கள். அவ்வூரில் சமாதியாகி இருக்கும் ஹாஜா பந்தேநவாஸ் ஒலியுல்லா என்ற மகானைத் தியானித்துப்பாடுகிறார்.

குணங்:—

இனவாசமெல்லாம்மறந்து வனவாசத்தில்
ஏகிவிட அருள்புரியவும்;
எட்டாத பேரின்பவனு பூதிவலியவந்து
எட்டுதற்கு அருள்புரியவும்;
மனமாயை சோரவும்மனவாசி ஏறவும்
மனமுவந்து அருள்புரியவும்;
மாங்காயில் வண்டுபோல் நீங்காதவண்ணம்
உள்மருவிநின்று அருள்புரியவும்;
உனையன்றியெனையடிமை கொள்வருண்
டென்றுஅடிமை யோராமலருள்புரியவும்;
ஓயாதரற்றியுங் கேட்கவிலையோவதுவு
முறைசெய்துனருள் புரியவும்;
வனிதையர்முயக்கற்ற தவராஜசிங்கமே!
வரவேண்டும் என்றன் அருகே.
மாகுணங்குடிவாழும் என் அகத்தீசனே!
மவுனதேசிக நாதனே!

(இவ்வாறு பாடிப்புகழ்ந்து அதைவிட்டுக் கடந்து நேராக மலையாளப்பகுதி நோக்கி நடந்தார்கள். இறுதியில் மலையாள ராச்சியத்தின் தலை நகரமாகிய திருவனந்தபுரம் வந்தடைந்தார்கள். இப்போது குணங்குடியாருக்கு வயது 35. மலையாள இராச்சி

யத்திலே ஒரு பகுதி. அங்கே பெரிய மந்திரவாதி யொருவன் தன்னுடைய மந்திர சக்தியால் பல படிப்பாளிகளையும் பல சாதுக்களையும் தனக்கு அடிமைப்படுத்தி நிகரில்லாத் தலைவனாக படாடோபத்தோடு வாழ்ந்துகொண்டிருந்தான். குணங்குடியார் அந்த ஊர்வழியாகவந்து கொண்டிருந்தார். இவர் வருகையைத் தன் சக்தியால் அறிந்து கொண்ட மந்திரவாதி ஒரு மரத்தாலான தடியை ஏவி அனுப்பினான். அந்தக்கழி அடித்தால் அடிபட்டவர்கள் கலக்கமடைந்து வந்தவழியே சென்றுவிடுவார்களாம். அந்தக்கம்பு ஆகாயத்தில் இருந்து விர் என்று நமது குணங்குடியாரை நோக்கிவந்தது. குணங்குடியார் அதைக்கவனித்துவிட்டார். தடியை எட்டித் தனது கையால் பிடித்துக்கொண்டார். கண் மூடி ஒரு கணம்நோக்கினார்; உள்ளவிசயம் புரிந்து விட்டது. உடனே கையில் பிடித்த கழியை நோக்கிச் சொன்னார்.

குண:—பிரம்பே! பகுத்தறிவு படைத்த மனிதன் தான் நல்வழி நடக்கத்தவறுகிறான் என்றால், நீயுமா தவறவேண்டும். என் போன்ற முதியவர்களுக்கும் கண்ணற்றவர்களுக்கும் நெடுவழிப் பயணத்தார்களுக்கும் ஊன்றுகோலாக நின்று உறுதுணையாக இருக்கவேண்டிய நீ என்போன்ற தேவையற்றவனை அடித்தா துன்புறுத்துவது? இனி இந்தப் பாவத்தைச் செய்யாதே. எனக்கும் நாற்பது வயது வரப்போகிறது. எப்படியும் ஒரு ஊன்றுகோல் தேவைதான். அதனால் நீயும் இனி என்னோடிரு.

(என்றுகூறிக் கம்பைக்கையில் பிடித்துக்கொண்டு மேல்நோக்கி நடந்தார். அப்படி நடந்து செல்கின்ற வழியிலே சில பாம்புகள் படமெடுத்துக்கொண்டு அவரை நோக்கி நின்றன. இதைக்கண்ணுற்ற குணங்குடியார் தனது கையால் அமர்த்தினார்கள். வந்த பாம்புகள் படமெடுத்தபடியே நின்றன.)

குண:—பாவம்! உலகிலுள்ள உயிரினங்கள் யாவும் சுதந்திரமாகவாழவே விரும்புகின்றன. ஆனால் பகுத்தறிவு படைத்த மனிதனோ பிறரைக் கெடுத்து வாழவிரும்புகின்றான். முடிவில் அவனுக்கும் மீதியில்லை. எல்லாம் எலும்புச்சே[illegible]... (பாம்புகளைநோக்கி) சரி! இன்றோடு நீங்கள் சுதந்திரமாக வனம்சென்று வாழுங்கள். (என்று கூறி தன்கைகொண்டு போகும்படி சைகைகாட்டினார். வந்த அரவுகள் திரும்பிச்செல்ல ஆரம்பித்தன. பிறகு அதையுங்கடந்து வரும்போது வழிமறித்து நெருப்புத் தணல் மூட்டி எறிந்துகொண்டிருந்தது. அதைக்கண்ட குணங்குடியார் இதுவும் அந்தமந்திரவாதி வேலைதான் என்றுணர்ந்து)

குண:—நெருப்பைச் செல் அரிக்காது; இரும்புச் செருப்புகளைக் காலில் அணிந்தவன் கண்ணாடிச் சில்லுகளின் மேல் நடக்கத் தயங்கமாட்டான்; என்போன்றவனுக்கு இது எம்மாத்திரம். (என்று ஏளனமாகக்கூறி நேராக நடந்து நெருப்பைக் கடந்தார்கள். கடந்துவரும்போது வீதியின் நடுவே இருபுறமும் தூண்கள் நாட்டி (ஆர்ச்சு)

வளைவு கட்டி அந்த முகப்பில் ஒரு மனிதன் நின்று கொண்டிருந்தான். அவனைக்கடந்து வளை வுக்குள் குணங்குடியார் செல்ல எத்தனிக்கும் போது அவன் சொன்னான்)

காவ:—யாரையா நீ! என் உத்தரவு இல்லாமல் இந்த எல்லைக்குள் நுழைய முடியாது.

குண:—யாருக்கு உத்தரவு! எனக்கு அது வேண்டிய தில்லை.

காவலாளி:—இது எனது குரு நாதரின் கட்டளை; அதை யாரும் மீறவே முடியாது.

குண:—அப்படியா! எங்கே இருக்கிறார் உன் குரு? அவரை நான் பார்க்கவேண்டும்.

காவ:—நீர் பார்க்க முடியாது.

குண,—காரணம்?

காவ;—இதோ இந்த தூணில் தொங்குகின்ற குடத்தில் உள்ள தேன் முழுவதையும் நீர் சாப் பிடவேண்டும். அதன் பிறகுதான் அவரைத் தெரிசிக்க முடியும்.

குண:—(புன்சிரிப்போடு) என்னப்பா இது வேடிக்கை! அவருக்கும் தேனுக்கும் என்ன சம்பந்தம்! விசயத்தை விளங்கச்சொல்லப்பா?

காவ;—இந்தக் குடத்தில் உள்ள தேன் முழுதும் நீர் சாப்பிடாவிட்டால் என் குரு நாதருக்கு அடிமை.

குண:—அருந்தி விட்டால்?

காவ;—என் குருநாதர் உமக்கு அடிமை; ஆனால் உம்மைப்போல் எத்தனையோ பேர் வந்து முடியாமல் சரண் அடைந்துவிட்டார்கள்; பாவம்! பெரிய மனுசன் போறியா வந்தவழியைப் பார்த்து.

குண:—வந்தவழி! ஆஹா! அருமையான தத்துவம்; அதுவும் உன்வாயில் வருகிறது. தோழா! வந்த வழியைநாடித்தான் போய்க்கொண்டிருக்கிறேன். சரி; இப்போது என்னை நியாயமாக உள்ளே விடுகிறாயா? மாட்டாயா?

காவ;—முடியாது. தேனைக்குடிக்கவேண்டும்.

குண:—சரி! நடப்பது நன்மைக்கே; திற தேன் கலயத்தை.

(காவலாளி தேன் குடத்தைத் திறக்கிறான்; குணங்குடியார் அருந்துகிறார். தேன் குறைந்து கொண்டே வருகிறது; காவலாளி வாய்பிளந்து ஆச்சரியமடைகின்றான். இச்சமயம் உள்ளிருந்து ஒரு அலறல்! ஐயோ! அம்மே! செத்தேன் என்று யாரோ ஒருமனிதன் கதறிக் கொண்டுவரும் சப்தம் கேட்டது. வந்த உருவம் வயிறு வீங்கிய வண்ணம் வளைவுவாசலை நோக்கி ஓடிவந்து)

மந்திரவாதி:—போதும் நிறுத்துங்கள்; குடிக்காதீர்கள். உடனே காவலாளி தேன் குடத்தை நிமிர்த்தினான்! குணங்குடியார் வந்த உருவத்தை நோக்கி.)

குண;—ஏனப்பா விண் அதிரக் கதறுகிறாய்?

மந்திரவாதி:—வயிறு வெடித்துவிடும்! மன்னியுங்கள் சுவாமி!

குணங்:—ஏன்! நான் தேளைக் குடிப்பதால் உன் வயிறு வீங்குவானேன். எனக்கல்லவா வயிறு வலிக்க வேண்டும்.

மந்திரவாதி:—மடையன் நான். உங்கள் மகிமை உணராமல் நடந்து கொண்டேன்; மனம் பொறுங்கள் சுவாமி!

குணங்:—இல்லை. அறிவுள்ளவன் நீ. ஆனால் உனது அறிவை நல்வழியில் செலுத்தத் தவறிவிட்டாய்; மனப்போக்கில் நடந்துவிட்டாய்.

ஊத்தைப்பிணமாம் உடலை இடிசுவரை
ஏற்றபடி விடுதல் ஞானம் நிராமயமே

நீ அடைந்திருப்பது சாதாரண வெற்றிதான். இதோ! இந்தவேல் கொண்டு தாக்கினாய்; அதையும் தடுத்தேன். கட்செவிகளை அனுப்பினாய்; அதையும் காத்தேன். இறுதியாக வெந்தழல் கொண்டு தடுத்தாய்; அதையும் கடந்தேன். இந்தச் செயல்களெல்லாம் உனது வெற்றி என்று வைத்துக் கொள்; ஆனால் இவை எல்லாம் உனக்கு என்ன பயனைத் தரும்? மனோநிம்மதி யுண்டா? தன்னைப் போன்ற ஒருமனிதப்பிறவியை ஏமாற்றி வாழ்வதிலே நாம் அடையும் முடிவான லாபமென்ன? [illegible] விடலாமா மனிதன் கேவலமானவன் சேச்சே!

வஞ்சவேல் கொடுமார்பில் எறியினும்
விஞ்சவே தழல் மூட்டி எறிக்கினும்
நஞ்சினூறு நாகம் நலியினும்
அஞ்சிடாதவர் ஆனந்தமானவரே.

என்பது உனக்குத் தெரியாதா? உன்னுடைய புரட்சியான அறிவை உன்னதமான வழியிலே செலுத்தி இருந்தால் இதுவரை எவ்வளவோ உயர்நிலை அடைந்திருப்பாயே. இதுவரை எதைக்கண்டும் மனவேதனை அடையாத நான் இன்று உன் அறிவீனத்தைக்கண்டு உள்ளபடியே புண்படுகிறேன். நடந்தது சரி; இனியாவது திருந்திநட.

மந்திரவாதி:—தங்களுடைய போதனையை இனி என்றென்றுமே மீறமாட்டேன், இன்றுமுதல் நீங்கள் தான் எனது குரு. என்னை மன்னித்து ஆசீர்வதியுங்கள் சாமி! (கைகூப்பிநிற்கின்றான்).

குணங்:—மனம் திருந்தியவன் எவனாக இருந்தாலும் நிச்சயம் அவன் ஆசீர்வதிக்கப்பட்டவன் தான். என்றாலும் உன்மனதுக்கு நான் ஒரு உபதேசம் சொல்லிவிட்டுப் போகிறேன்; அதன்படிநட. பலன் பெறுவாய்.

எத்தனை ஆட்டம்நீ ஆடினும் பதைப்பற்று
இருந்திடுவாய் நெஞ்சமே.

புத்திசற்றேனும் படைத்தாயெனில்
அந்தப்போதனையே உனைந் தேற்றும்
மூன்று வாதனையும் மறமாற்றும்
யோகசாதனை மீதினும் ஏற்றும்

நற்றவஞ்சித்திக்கும் முத்திதரும்
தசநாதத்தையுஞ் சுத்தியாக்கும்—கட்டிச்
சுற்றுமறுதலக் கட்டுமவிழ்ந்திடச்
சோடசப்பின்னலை நீக்கும்—பாயும்

பத்தோடிரண்டு கலையும் எட்டாகப்
பராபரமும் ஆகும் பார்க்கும்—நல்ல
சுத்த மெய்ப்படிக்குச் சுயஞ்சோதிச்
சுழிமுனை யுந்தனைக் காக்கும்—எமன்
உத்தியோகந் தன்னைப் போக்கும்—வந்து
வெற்றிக் குணங் குடிவாய்க்கும். 1

கற்பகந் தன்னை வெளியில்விடாமலும்
கட்டித் தொழுவினில் மாட்டும்—வீட்டில்
பாற்பசுவைப் பக்குவத்துடன் வைத்து
அதன் பாலைக் கறந்துணக் கூட்டும்—ஏழை
போற்பசி தன்னையும் போக்கித் தபசுக்குப்
போவென்ன நேர் வழி காட்டும்—அதன்
மேற்படைக் காலால் உதைத்துவதைத்தின்னும்
விட்டோடே என்றுகை நீட்டும்—உன்றன்
மாற்படி பாவையுஞ் சாட்டும்—மாட்டை
மேய்ப்பாக் குணங்குடி யோட்டும். 2

வஞ்ச மறலி வரவிடு தூதனை
வஞ்சியர் ஆசை விட்டோட்டும்—மெத்தப்
பிஞ்ச பழங்கந்தை யான புன்மாயையைப்
பேயர் தலையினிற் போடும்—நாளும்
தஞ்சம் என்றென்குரு நாதன் திருவடி
தன்னைத் தொழுதிட நாடும்—இனி
என் செயல் ஏதும் இல்லை என்றவரிடம்
ஏங்கி ஏங்கி நையப்பாடும்—நின்று
அஞ்சாமல் அஞ்சியே வாடும்—மிக்க
கெஞ்சிக்குணங்குடி தேடும். 3

எண்ணாத வெண்ணத்தினூடேபடர்ந் தெழும்
இன்பவினோதத்தை மீட்டும்—கெட்ட
மண்ணாசைமூவாசை புண்ணாகவும் நல்ல
மானாபிமானத்தை யோட்டும்—என்றன்
கண்ணேமணியே என்கண்ணுதலேயெனக்
கண்ணீரு முண்ணீரு மூட்டும்—பின்பு
தண்ணீரும் மண்ணுங் கலந்ததுபோற் சிந்தை
தத்தளிக்க நிலைநாட்டும்—நடம்
பண்ணும் பரவெளி சூட்டும்—உய்யும்
வண்ணக் குணங்குடி காட்டும். 4

வித்தகனார் சொன்னபுத்தி புன்மாயையை
வேங்கைப்புலி யெனச்சாடும்—நம்மை
வெற்றி கொள் மாதர் முயக்களற் கேணி
விரிவோடவுங்காயப் போடும்—உன்னைப்
பெற்றார் பிறந்தார் சுற்றத்தார் முதலான
பித்தர்க் கெல்லாம் முகம்வாடும்—நல்ல
பத்தரை மாற்றுப் பசும்பொன்னை யொத்த
பரவெளி பம்பரமாடும்...மேலுங்
கத்தன் அருளுங்கைகூடும்—நாளும்
சித்துக் குணங் குடியாடும். 5

எங்கும் நிறைந்த பெரும் பொருள் என்னுள்ளே
இருந்து கொண்டே விளையாடும்—ஒரு
கங்கு கரையறப் பொங்கிப்பரவிக்
கருணைக் கடல்வந்து மூடும்—அருள்
வங்கமுந்தங்காமல் இங்குவந்தென்னை
மகிழ்ந்தடுத் தேற்றிக் கொண்டோடும்—நாளும்

மங்காத தங்க மவுனப் பொருளும்
மலைமலையாகக் கைகூடும்—இன்னும்
பங்கு கொடுக்கவும் நாடும்—யோகம்
தங்குங் குணங்குடி கூடும். 6

வாசாம கோசர வான்பொருள் என்றன்
மடிமீது செங்கிரை யாடும்—மோன
தேசிகன்பாதார விந்தம் தைதத்தத்தை
தெய்யெனக் கூத்துகள் போடும்—எங்கள்
ஈசன் திருவருட்டாளாணை கொட்டிப் போர்
இன்பக் கோலாகலம் பாடும்—எம
பாசம் அறுத்துக் கொண்டென்னச்சமட்டமும்
பாய்ந்துமடம டென்றோடும்—கோட்டை
வாயிற் கடந்துட் சென்றோடும்—மேலே
போகங் குணங்குடி கூடும்.
எத்தனையாட்டம் நீ ஆடினும் பதைப்பற்று
இருந்திடுவாய் நெஞ்சமே.” 7

(இவ்வாறு கூறிவிட்டு பிரமித்து நிற்கும் மந்திரவாதியைப் பார்த்து)

குணங்:— அறிவுள்ளவனே! இந்த உபதேசமே உனக்குப் போதும். இன்று முதல் நீ மனிதனாகவாழ்; இறுதி வெற்றியடைவாய்.

மங்:— நிச்சயம் வாழ்கின்றேன் சுவாமி! இனிமனிதத் தன்மையைவிட்டு ஒரு அணுக்கூடப் பிசகவே மாட்டேன். இது சத்தியம்.

குணங்:— நல்லது; நான் போய்வருகிறேன்.

(என்று கூறிநடந்தார்)

மந்திரவாதி புத்துணர்வு பெற்றவனைப்போன்று கண்களில் ஆனந்தக் கண்ணீர்மல்க தனது குரு நாதரைப்பார்த்த படியே கைகூப்பிநின்று கொண்டிருந்தான். குணங்குடியார் சென்று கொண்டிருந்தார். வீதிவழியாகவரும்போது விரக்தியோடு ஒருபாடலை அவர் வாய் முணுமுணுக்கின்றது.

குணங்:—அகடமுறுசாமர்த்தியம் எல்லாம் மறந்தடிமை
    அன்படைய அருள்புரியவும்;
அதிகப் பிரசங்க மெல்லாம் மறந்தடிமை
    அறிவடைய அருள் புரியவும்;
வெகுளி விளையாட்டுமுதல் எல்லாம்மறந்தடிமை
    வீறடைய அருள்புரியவும்;
வேடிக்கையொடு பகட்டெல்லாம் மறந்தடிமை
    வீடடைய அருள்புரியவும்;
பகடிபரியாசங்கள் எல்லாம் மறந்தடிமை
    பதம் அடைய அருள்புரியவும்;
பாடிப்படித்தகதை எல்லாம் மறந்தடிமை
    பரம் அடைய அருள்புரியவும்;
மகுடந்தரித்த மெய்த்தவராஜசிங்கமே!
    வரவேண்டும் என்றன் அருகே.
மாகுணங்குடிவாழும் என் அகத்தீசனே!
    மவுனதேசிக நாதனே!

(கீழ்வருவதை இராகத் தோடுபாடுகிறார்)

ஆனந்தபைரவி:

ஐயையோ! என்விதிவசம் யாரிடம் சொல்வேன்
    நையும் உடல் மெய்யென்றெண்ணிப் பொய்யனு
        [கினேன்; (ஐ)

பெண்டுபிள்ளை என்றுமனம் பித்துக் கொள்ளுதே-நாம்
என்றுமிருப்போமெனவும் சண்டை துள்ளுதே. (ஐ)

பழிக்கோளன் உடலைப்படைத்து வளர்ப்பேன்—இதைப்
புழுக்கோ நாய் நரிக்கோ பிடுங்கக் கொடுப்பேன் (ஐ)

கையின் வெண்ணை தனை விட்டு நெய்யைத்
தேடுறேன்—என்
ஐயன் பாதந் தனை விட்டுப் பொய்யைக்கூடுறேன் (ஐ)

மாதுமக்கள் என்று என் மதிமயங்குதே—கெட்ட
சூடுசெய்வாரோடு கூடி வாதுபேசுதே. (ஐயையோ)

வாக்கு மனம் அணுகாத வான்பொருளுள்ளே—அதை
நோக்கி நோக்கிப்பார்ப்பவர்க்கு வாய்க்குமே
[கொள்ளை. (ஐயையோ)

புந்தி மகிழ்ந்து உண்டுடுக்கச் சிந்தை துள்ளுதே—தீய
அந்தகாரந் தன்னை அகமாக்கிக் கொள்ளுதே. (ஐ)

காயிலையுதிர்ந்த சருகு கனிதின்று—நாம்
ஆயும்மறை முடிவைத் தேடிப்போவதுமென்று. (ஐ)

தேகத்தின் அன்பு வெளியாக வாடினோர்—அவர்
ஆகமச்சொற்படிக்கே அருளைக் கூடினோர். (ஐ)

ஆழிகரையின்றி நிலை நிற்கவில்லையோ—யான்
பாழில் அலையாதெனக் கோர்பாதை யில்லையோ; (ஐ)

ஆசைபாசம் அற்றவர் அருளைப்படைப்பார்—அவர்
தேசிகன் குணங்குடி தெருவில் இருப்பார்.
ஐயையோ என்விதிவசம் யாரிடம் சொல்வேன்!
நையும் உடல்மெய்யென்றெண்ணிப் பொய்யனா
[கினேன்.

இவ்வாறு பாடிக்கொண்டே மெய்ஞானசொரூபராகிய பீர்முகம்மது ஒலியுல்லா அடங்கி இருக்கும் தக்கலை என்ற ஊர்வந்து சேர்ந்தார்கள்; நேராக அம்மகான் சமாதிகொண்டிருக்கும் தர்காவுக்குப் போனார்கள். சன்னிதானத்தில் மரியாதையோடு நின்று மனஉருக்கத் தோடு பாடுகிறார்கள்.

குணங்: —

தேவரீர் திருவடிக் காளாக அட்டமா
 சித்தி தந்தருள் புரியவும்;
சித்தர்கண மெல்லாம் எனக்கருள் இறங்கவும்
 சித்தம்வைத்தருள் புரியவும்;
பாவிஅடியேன் செய்த பாவங்களெல்லாம்
 பறந்தோட அருள்புரியவும்;
பக்குவம் அறிந்தெனைப்பக்குவவிசேடனாய்ப்
 பண்ணிவைத்து அருள்புரியவும்;
நாவிட்டு உரைக் கொணாச் சோதிநயனத்தூடு
 நடனமிட அருள்புரியவும்;
நம்பினேன் ஐயனே நட்டாற்றில் எனைக்கை
 நழுவிடாது அருள்புரியவும்;
மாவேகமாக மெய்த்தவராஜசிங்கமே!!
 வரவேண்டும் என்றனருகே.
மாகுணங்குடி வாழும் என்அகத்தீசனே
 மவுனதேசிக நாதனே!

இயல்பு கெட்டோனாகிப் போய்நான் அலைந்திடாது
 இயல் பொன்ற அருள்புரியவும்;
இலைசருகு பட்சணம் பண்ணிஏகாந்தமொடு
 இருந்திடற் கருள்புரியவும்;

வெயிலூடுறைந் தெனது தேகம் எலும்பாய்
மெலிந்திடற்கு அருள்புரியவும்;
மெய்த்தவசு மூட்டவும் பொய்த்தவசை யோட்டவும்
மெய்ஞ்ஞான அருள்புரியவும்;
செயலினை மறுக்கவும் முயலினை யறுக்கவும்
சிற்சுகம் அருள்புரியவும்;
செத்த சவமென்னக் கிடக்கவும்
சாகாது செத்திடற்கு அருள்புரியவும்;
மயில் வெட்டு நடனமிடு குருராஜசிங்கமே!
வரவேண்டும் என்றன் அருகே.
மாகுணங்குடி வாழும் என்னகத்தீசனே!
மௌனதேசிக நாதனே!

(இவ்வாறு ஆடிப்பாடிவிட்டு அங்கேயே ஒருநாள் தங்கினார்கள்;)

மறுநாள் தர்க்கலையிட்டுப் புறப்பட்டுப் பல நாட்கள் கடந்து ஒருநாள் மாலை காயல்பட்டணம் என்ற ஊரை வந்தடைந்தார்கள். அங்கே பெட்டைக் குளத்துப்பள்ளி என்று அவ்வூர் மக்களால் அழைக்கப்படுகின்ற பள்ளியில் போய்தங்கினார்கள்; நடுநிசி வேளையில் தனித்திருந்து கணைப் பாறுதலோடு, மனங்கசிந்து எல்லாம்வல்ல இறைவனிடம் முறையீடு செய்கிறார்கள். இந்தசமயம் பள்ளியின் ஒரு பாகத்தில் தாடிவைத்த ஒரு பெரியார் கையில் ஜெபமாலை வைத்துக் கொண்டு, ஏதோ ஓதிக்கொண்டிருந்தார். இறைவனிடம் உருக்கமாகக் குணங்குடியார் பாடுவதைக்கேட்ட அப்பெரியார் எழுந்துவந்து

குணங்குடியாருக்குப் பின்புறமாக இருந்து கொண்டு அமைதியோடு பாடுவதை மிகவும் கவனமாகக்கேட்டுக் கொண்டிருக்கிறார். குணங்குடியார் கல்லும் கசியும் வண்ணம் பாடுகிறார்கள்.

குணங்:—

ஆதிமுதலே அகண்ட பரிபூரணமே
ஓதுங் குணங்குடி கொண்டோனே—நிராமயமே!
சுத்தத் திருவடியிற் சொக்கி அருள்பெருமுன்
செத்திறந்து போனால் என்செய்வேன்—
[நிராமயமே!
கண்ணேமணியே என்கண்ணிறைந்த காரணமே
விண்ணே மெஞ்ஞான வெளியே—நிராமயமே!
மோனமவுனமணி மூடிவைத்த பெட்டகமே
தேனமுதவின்பத் தெளிவே—நிராமயமே!
பொய்யுங்கபடு முள்ளே பூட்டிவைத்த பெட்டகமாய்
நையும் உடல்எடுத்தேன் நான்கான்—
[நிராமயமே!
வேதச்சுமையதனை வீம்புக்கு எடுத்த உடல்
மாதவத்திற் கெங்கே வளையும்—நிராமயமே!
சிந்தைச் சிதையாச் சிவராஜ யோகநிலை
வந்தோர்க்கருள்புரிய வந்தாய்—நிராமயமே!
கோடானுகோடிமறை கூறவறியாத உன்னைத்
தேடுகின்ற தென்னே வென்திரமே—நிராமயமே!
நீரால் திரள் குமிழி நேயவடையும் முடலம்
ஆரார்க்குக்கை கொடுத்ததையா—நிராமயமே!

அமையாமனம் அமைந்தே அருட்கடிமைப்பட்டவரை
எமனுலும் என் செயலாம் எந்தாய்—நிராமயமே!
செத்த சவமென்றும் சின்னஞ்சிறிய ரென்றும்
முத்தர்க் கிருக்கும் முறைகாண்—நிராமயமே!
ஆகமத்துக் கெட்டா அகண்ட பரிபூரணமாம்
ஏக வெளியன்றோ இயம்பாய்—நிராமயமே!
எழுகடலும் ஊர்கடுகின் இடையிருத்தக்கற்றாலும்
வாழுமனத்தினர்க்கு வாயோன் நிராமயமே!

பூமிப்பரப்பை வலம் போய்வரினும் பாவிகளைக்
காமவிலையகலக்காதேனோ—நிராமயமே!
காதொடு கண் வாய் மூக்கும் கண்டமெய்
[யோடையறிவும்
வாதாடுதற் கேவலர்த்தேதன்—நிராமயமே!
பாட்டைப் படித்ததனல் பகர்ஞான வான்என்பர்
ஏட்டுச் சுரைக்காய்க் கியல்பாம்—நிராமயமே!
சோம்பேறிகள் போற் சுருண்டமனத்தினர்க்கு
காயமிகாரம் கசப்பாம்—நிராமயமே!

துர்க்கலவையற்றதுரியா தீதத்தினர்க்கு
நற்கலவை யானோ நடிக்கும்—நிராமயமே!
சித்தந்தெளிந்த சிவஞானியர் உலகப்
பித்தர் உறவைப் பிடியார்—நிராமயமே!
பாசம்மறவார் பரமபதத்தினர் போல்
பேசும் சிலர் கூடவும் நான் பேசேன்—நிராமயமே!
மனப்பாசமற்று நிற்க வாயால் மலைப்புகழும்
இனங்கள் முழுதும் எனக்கு எதிர்காண—
[நிராமயமே!

திக்கு விஜயஞ் சிவராஜயோகியர்க்காம்
துக்கவலையோர்க் குத்துறை யோ—நிராமயமே!
சிவராஜ யோகந் தெளிந்த திறத்தினர்க்கு
எவரைச்சரியிடுவ தெந்தாய்—நிராமயமே!
கைப்பொருளைத்தேடக் கடலோடிப் போவரென
மெய்ப்பொருளைத் தேடிமெலிந்தேன்—
[நிராமயமே!

மூடு முளிக்கிடையாம் மூக்கு நுனிகட்கிடையில்
ஆடுந்திரு நடனத் தாட்டம்—நிராமயமே!
தன்னை யறிந்தால் தனக்கொரு கேடில்லை எனச்
சொன்னமொழியே சுகங்காண்—நிராமயமே!
நாழியுப்பும் நாழியப்பும் நாழியாந்தன்மையும்
முப்பாழ் எய்தினோர்க் கோபகராய்—நிராமயமே!
எம்மால் இன்றுந்த இருவினையும் போகவிட்டுச்
சும்மா இருக்கச் சுகங்காண் — நிராமயமே!

இவ்வாறு குணங்குடியார் நெடுநேரமாகப்பாடி முடித்தார்கள். இதைப்பின்புறமாக இருந்து கேட்டுக்கொண்டிருந்த அந்த மனிதர் வேறுயாருமல்ல. குணங்குடியாரின் பள்ளித்தோழரான செய்கு அப்துல்காதர்நெய்னார் என்ற புலவர் நாயகம்தான். குணங்குடியாரைக் கூர்ந்து கவனித்து அடையாளம் புரிந்துகொண்ட அப்பெரியார் தனது கண்களில் ஆனந்தக்கண்ணீர் பொங்கத்துறவியைநோக்கி.

புலவர்:—அஸ்ஸலாமு அலைக்கும். குணங்குடியாரே!

குணங்:—வ அலைக்கு முஸ்ஸலாம். (திரும்பி அவரைப் பார்த்து) யார் நீங்கள்?

புலவர்:—முத்தர்க்கரசா! நான் உங்கள் பள்ளித் தோழன். புரியவில்லையா?

குணங்:—ஓஹோ! புலவர் நாயகமா? (கூர்ந்து கவனித்த பிறகு) தோழா! சுகமெல்லாம் எப்படி?

புலவர்:—குறைவாயில்லை; உமது ஆணையை மீறியிருந்து வருகிறேன்.

குணங்:—நிலை எவ்வாறு?

புலவர்:—ஏதோ பாட்டிற்குப் பலன் கிடைத்துவருகிறது.

குணங்:—பிறவிப்பயனை அடைந்துள்ளீர்; அல்ஹம்து லில்லாஹ். (புகழனைத்தும் இறைவனுக்கே.)

புலவர்:—இறுதியில் சந்திப்போம் என்ற எனது நாட்டமும் நிறைவேறிவிட்டது.

குணங்:—நீர்தான் புலவர் நாயகமாச்சே உமது சொல் பொய்த்தா விடும்?

புலவர்:—ஆழி பொங்குவதற்கும் ஆறு பொங்குவதற்கும் நிரம்ப வித்தியாசமுண்டு. உமது புலமை மலையைப் போன்றது.

குணங்:—நீரும் உயர்த்துகின்றீரே; கீழேபோட்டு விடுவீரோ? (குணங்குடியார் முகம் புன்முறுவல் செய்கிறது)

புலவர்:—அந்த நிலை நிச்சயம் உமக்குவராது; நான் உண்மையைத்தான் சொன்னேன்; தோழா! நீர் எப்படிப்பட்டவரென்று நான் சொல்லவா?

(குணங்குடியார் புன்முறுவலோடு கவனிக்கிறார். புலவர் நாயகம் இனிமையான இசையோடு சொல்கிறார்.)

"வையமொருகையினுற மெய்யியல்கள் பொய்யினுற
மையல்வலை பெய்யுமடவார்;
வள்ளியிடை விள்ளுமுறை வெள்ளைவிழிதுள்ளவரு
வள்ள முறுகள்ளைவிடலால்;
பையமதி தொய்ய வறிவுய்யவுணர்வைய நெறி
பையிலிடு கையதனினால்;
பள்ளமிரு வெள்ளமிசைதள்ள விழுமுள்ளழிகொள்
பள்ளையர்த முள்ளநிலையாய்த்;
துய்யமகள் செய்யமகள் மெய்யின்மகள் கையின்மகள்
தொய்யிலணி வையமகளும்;
துள்ளிமலரள்ளி எதிர்கொள் உமதுபள்ளியிடை
துள்ளல்இசை தெள்ளியுறலால்;
வெய்யவினை நையவருள் செய்யும் எனதைய நிறை
விழிகருணையால் நோக்கியே;
வேதாகுணங்குடியின் நாதா அருந்தவ
விநோதா புரந்தருள்கவே. 1

(இவ்வாறு பாடிமுடித்ததும்)

புலவர்;—தோழா! தவக்கடலாகிய உம்மை நான் பொய்த்துதி பண்ணவேமாட்டேன்; அது எனக்குப்பிடிக்காது.

குண:—ஓஹோ! அப்படியா!

கற்ற கல்வியற்று கன்மமுதல் பாசமற்ற
உத்தமர்க்குச் சித்தம் ஒடுங்கும்—நிராமயமே!
பேச்சற்று சிந்தைபிறக்கினையும் அற்றபதம்
வாய்த்தார்க்கன்றேமவுனம் வாய்க்கும்—
[நிராமயமே!

காயக்கருவி கரணமுதல் காயவைத்த
நேயருளத்தில் நிறைவே—நிராமயமே!
காமக்கடல்கடக்க கருத்தவியக் கப்பல்வைத்தால்
நேமநிட்டைக்கம்பம் நிலைகாண்—நிராமயமே!

அதுமட்டுமல்ல புலவரே!

காமக்குரோதங்களற்று—சூழுங்
கருவிகரணம் சகலமுமற்று
நேம நிஷ்டைகளு மற்று—நின்ற
நிலையும் மறந்து குருவடிபெற்று.

பொறிபுலன் அடங்கியகாலே—பரி
பூரணப் பொருள்வந்து வாய்க்கும் அப்பாலே
அறிஞரும் அறியாது போல—காணும்
ஆனந்த வெள்ளத்தில் ஆடினதாலே.

நினைவுங்கனவும் மறந்து—நின்ற
நிலையும்மறந்து எழுகலையும் மறந்து
இனமும் மனமும் மறந்து—பின்னர்
இதனிடைத் தோன்றிய விதங்களும்மறந்து;

விண்ணுக்குள் வெளியிருள் மாற்றி—அதில்
வேதாந்த மூலவிளக்கினை யேற்றி
கண்ணுக்குள் மணியாகத் தோற்றி—வரும்
காரணமான கடவுளைப் போற்றி;

குணங்:—இதுதான் தோழா முடிந்த நிலை; மனிதப் பிறவியெல்லாம் புனிதப் பிறவியாக மாறவேண்டு மானால், எல்லோரும் இந்த நிலைக்கு வந்துதான் ஆகவேண்டும்; மேலும் மனத்தின் ஆட்டத்தை ஒரு நிலைப்படுத்துவதே தவம்; மன ஆட்டம் நின்ற நிலையே முத்தி; இதுதான் தவம் என்ற நீட்டையின் முடிவு.

புலவர்:—ஆஹா! அருமையான விளக்கம்; சரியான தத்துவம். அன்பரே! இப்போதாவது நானும் உம்கூட வரலாமா?

குணங்:—ஆம்! எனக்கும் நாற்பது வயது நெருங்கி விட்டது; என் உலகப் பிரயாணத்தை முடித்து விட்டு ஒடுங்கிவிட எண்ணி சென்னையம்பதி நோக்கிப் போய்கொண்டிருக்கின்றேன்; நீரும் உமது இல்வேலைகளை எல்லாம் ஒருவகையாக முடித்துக்கொண்டு அங்குவந்து சேரும்; ஒன்று படுவோம்.

புலவர்;—அப்படியே செய்து விரைவில்வந்து சந்திக் கிறேன்.

குணங்;—அன்பைவளர்த்து உறவைப்பெருக்குகின்ற தோழா! நான் போய்வரட்டுமா? (அமைதிப் பார்வை)

புலவர்:—நல்லது. (கண் கலங்குகிறது)

குணங்:— அஸ்ஸலாமு அலைக்கும்.

புலவர்:—வ அலைக்கு முஸ்ஸலாம்.

(புலவர் நாயகம் கண்களில் நீர் ததும்ப நிற்கிறார்கள். குணங்குடியார் வீதிவழியே போய்க்கொண்டே இருக்கிறார்கள்)

காயல்மா நகரை விட்டும் பிரயாணித்த குணங்குடியார், பல ஊர்களைக் கடந்து பல நாட்கள் கழிந்து ஒருநாள் மதுரையம்பதிவந்து சேர்ந்தார்கள். மாலை நேரமாகிவிட்டதால் மதுரை மீனாக்ஷியம்மன் கோவிலில் துறவிகள் பலர் தங்குகின்ற இடத்திலே இவர்களும் போய்த்தங்கினார்கள். இரவுவந்தது; நேரம் கடந்தது; நடுநிசி, மற்ற சாதுக்களுக்கோ களைப்பு; அதனால் தூக்கம். குணங்குடியாருக்கோ விழிப்பு; அதனால் இறைவனைப்பற்றிய ஏக்கம். இப்போது குணங்குடியார் பக்திப்பரவசத்தோடு அமுதவாய்திறந்து அழகிய தொனியிலே அருமையாகப்பாடுகிறார்கள்.

குண:—

கோடிப் பெருமதிகள் கூடும் ஒருமதிபோல்
வாடியென்மானே பெண்மானே-மனோன்மணியே!
கண்ணே என்கண்மணியே கண்குளிர்ந்தகட்டழகுப்
பெண்ணே அமிர்தப்பிழம்பே —மனோன்மணியே!

பெண்கள் நர்த்தத்தோடுனையான் பிரியாமணம்
[புணரக்
கண்களுறங்காக் கனவு கண்டேன்—மனோன்
[மணியே!

மலர்ந்திருக்கும் பொற்கமலமணவரையில்
[இருவருங்கை
கலந்திருக் கவுங்கனவுகண்டேன்—மனோன்
[மணியே!

மெய்தழுவவும்இருவர் மெய்யோடு மெய்நெருங்கக்
கைதழுவவுங்கனவு கண்டேன்—மனோன்மணியே!
வண்ணவுடைக்கும் உந்தன் வாலவயதினுக்கும்
அன்னநடைக்கும் எந்தன் ஆசை—மனோன்
[மணியே!

துவளுந்துடியிடையும் தோகைமயில் நடையும்
பவள இதழு மென்று பார்ப்பேன்-மனோன்மணியே!
கட்டாடைவர்க்க மெல்லாம் கண்டுகளித்து உயர்
பட்டாடை வர்க்கம் வைத்துப்படைப்பேன்—
[மனோன்மணியே!

முடியீதெனும் மகுடமுடி சூட்டுவேன் நற்குணங்
குடிமாதவர்கள் குலக் கொழுந்தே—மனோன்
[மணியே!
சன்னிதானத்தில் சரணஞ் சரணமென்று
சொர்ணமலர் தூவித்தொழுவேன்—மனோன்
[மணியே!

முட்டை பொரிப்பேன் முழுக்கோழி தான்
[பொரிப்பேன்
தட்டைப்பீங்கானில் வைத்துத்தருவேன்—
[மனோன்மணியே!
அடிக்கு ஆயிரம் பொன்விலையானாலும் ஈந்துகுணங்
குடிக்குள் மாளிகை கட்டிக் கொடுப்பேன்—
மனோன்மணியே!

புவனத்து அரசரெல்லாம் போற்றிப்பணிய எந்தன்
மவுனமலரணை மேல் வாழ்வாய்—மனோன்மணியே!
சொர்ணம் மலைமலையாய் தொகைவகையிலா
[தளிக்கும்
கர்ணனெனவும் எனைக் காண்பாய்—மனோன்
[மணியே!

முடிதாங்கு மன்னர் முதல்எவரும் உன்திருவாயில்
படிகாக்கும் வாழ்க்கைப் படைப்பேன்—மனோன்
[மணியே!
என்பற் றுனக்கிருந்தால் இராஜ ராஜேஸ்வரியாய்
ஐம்பத் தொருதேசமும் நீ ஆழ்வாய்—மனோன்
[மணியே!

படையாதெல்லாம் என்னால் படைத்து பரதேசிகுணங்
குடியாரையோ தேடிக்கொண்டாய்—மனோன்
[மணியே!
ஆடாதுஆடி அவுசாரியான உன்னைப்
பாடாதும் பாடில் என்னபயமோ—மனோன்
[மணியே;

பானைச்சோரெல்லாம் பதம்பார்த்துத்தின்றதினி
மானம் அழியில் உயிர் மயிர்தான்—மனோன்
[மணியே!
பல்லை இதழ் கடிக்கப்பானை தடியொடிக்கக்
கல்லைத் தேங்காய் உடைக்கக்காண்பாய்—மனோன்
மணியே!

போனதெல்லாம் போச்சு பொழுது விடிந்ததினி
ஆனதெல்லாம் மனத்தில்நாடேன்—மனோன்
[மணியே!

என்னை விட்டால் மாப்பிள்ளைமார் எத்தனையோ
[உந்தனுக்கு
உன்னைவிட்டால் பெண்ணெனக்கு உண்டோ—
[மனோன் மணியே!

தொடுத்தணைத்துக் கொண்டே துயில்வன்மற்ற
[நேரமெல்லாம்
எடுத்தணைத்துக்கொண்டே இருப்பேன்—
மனோன்மணியே!
படுத்துப்படுத்து நெஞ்சில் பனிச்சுப் பனிச்சென்று
[முத்தம்
கொடுத்துக் கொடுத்து இன்பம் கொள்வேன்—
[மனோன்மணியே!

வண்ணச் செழும்பவளவாயிதழ் ஊறல்சுவைத்துன்
கன்னத்தில் வீழ்ந்துகடிப்பேன்—
[மனோன் மணியே!
படியோர்க் கெல்லாம் உயர்ந்த படியோர்களான
[குணங்
குடியோர்கள் போலும் இன்பங் கொள்வேன்—
[மனோன்மணியே!

சேயாயும் என்மடியில் செங்கீரையாடியருள்
தாயாயும் அங்கை தருவாய்—மனோன்மணியே
அங்கைதந்து தந்தே அணைத்தாயருள் அமிர்தம்
கொங்கைதந்து தந்தே கொடுப்பாய்—
மனோன்மணியே!

தாவியணைத்தேஎன் தாயே உனை என்றிந்த
பாவிமடியில்வைத்துப் பார்ப்பேன்—மனோன்
[மணியே!

ஏங்கியழுவேனோ உன் இணையடியைக்காணாமல்
தூங்கிவிழுவேனோ என்தோழி—மனோன்மணியே!

உலைபோல் எரியும் எந்தன் உளங்குளிர மேல்வளர்ந்த
மலைபோல் எழுந்தருளி வருவாய்—மனோன்மணியே!

கன்மம் அறுவதெந்தக் காலமோயானறியேன்;
நன்மை தருவதெந்தநாளோ—மனோன்மணியே!

பன்னீர் ஒழுகும் உந்தன்பாதமலரை எந்தன்
சென்னிமீதென்றும் அருள் செய்வாய்—மனோன்மணியே!

வடியாவருள் அமிர்தம் வடியவடியக் குணங்
குடியாரொடு கனிவிற் குடிப்பேன்—மனோன்மணியே!

பெண்ணேமயிலினமே பூரணமேயென்றுனையென்
கண்ணிறக்கக் கண்டு காண்பேன்—மனோன்மணியே!

கூந்தல் இலங்கக் குரும்பைத் தனங்குலுங்க
நேர்ந்து நடம்புரிந்து நிற்பாய்—மனோன்மணியே!

காற்றுப்பட்டாலுங் கலங்கும் எந்தன்மேனியில் நீ
பார்த்துத் தொடவின்பம் படைப்பேன்—மனோன்மணியே!

கூந்தலுக்கு நெய்தேய்த்து குளிர்மஞ்சள் நீராட்டி
வார்ந்து சிங்காரித்து வைப்பேன்—மனோன்மணியே!

காலிற்பனி நீர்விட்டுக் கழுவிமடிமீதில்வைப்பேன்
மேலில் அத்தரும் பூசி விடுவேன்—மனோன்
[மணியே!

கற்பூர மேற்றிக் கரத்தீ பவாலாத்தி
எப்பாரும் போற்ற எடுப்பேன்—மனோன்மணியே!!

மண்ணு யழுந்தாமல்மனமே முழுவதினுங்
கண்ணுடியாயிருக்கக் காண்பேன்—மனோன்
[மணியே!

மங்காதொளிபரப்பும் மவுனமணியாலும் ஒரு
சிங்காசனமேடை செய்வேன்—மனோன்மணியே!

கட்டிலினுங் கூடி களிகூர்ந்து கொண்டிருப்போம்
தொட்டிலினும் ஆடிச்சுகிப்போம்—மனோன்
[மணியே!

போதத்தனங்குவித்த பொக்கிஷமுங்கை குவிப்பேன்
பாதத்தினும் வீழ்ந்து பணிவேன்—மனோன்
மணியே!

முடிமன்னர் தம்வாழ்வுமுதல் எவையும் எங்கள்குணங்
குடிமன்னர் தம்வாழ்வுங் கொடுப்பேன்—
மனோன்மணியே!

உன்மீதில் ஆசித்து உயிர் பொருள் உன்தாட்
[களிப்ப
என்மீதில் ஆசையுனக்கிலேயோ—மனோன்
[மணியே!

உள்ளதுரிய தெல்லாம் ஒப்புக் கொண்ட
[பின்னல்லவோ
கள்ளமனம்படைக்கக் கற்ருய்—மனோன்மணியே!

வேசைக்குணத்தை விரும்புவாய் என்றறிந்தால்
காசைப்பணத்தை நான் காட்டேன்—மனோன்
[மணியே!

உத்தமிப்பெண் என்றே உவந்தேன்
[இப்போதுன்றன்
பத்தினித்தனத்தை நன்றாய்ப்பார்த்தேன்—
[மனோன்மணியே!
மூக்கும் உனக்கு முழம்மூன்றோ பத்தினிபோல்
நாக்கும் உனக்கு முழம்நாலென்—மனோன்
[மணியே!

இனிக்கண்டறிந்துகொள்ள இவன் ஆண்பிள்ளை
[யானால்
தனிக்கப்போது புத்தி தருவான்—மனோன்
[மணியே!
தடித்தனமே செய்தாலும் சம்சாரத்திற்படிந்து
குடித்தனஞ் செய்தாலென்ன குறையோ—
[மனோன்மணியே!

கச்சிறுக்கும் மாதரின்பம் கைக்கிறுக்கும்
[போதவின்பம்
வைச்சிறுக்கும் கொங்கையிற்கைவைப்பேன்—
[மனோன்மணியே!
கால்பிடித்துக் கண்ணில்வைத்து கைகுவித்து
[மெய்மயங்கி
மால்பிடித்துச் சொன்னதெல்லாம் மகிழ்வாய்—
[மனோன்மணியே!

அடியானை உன் அடியார்க் கடியாருமாக்கிக் குணங்
குடியான் எனப்பிரியம் கொடுப்பாய்—மனோன்
[மணியே!

தாயினும் மிக்காங்கருணைத் தயாநிதியே
[இவ்வுரையை
நாயினுமிக்காங்கடையேன் நவின்றேன்—
[மனோன்மணியே

வற்றாஅருட் செல்வமே வாழ்வே கருணாநிதியே
பொற்றாமரைக்கமலப் பொருட்டே—மனோன்
[மணியே!

பூக்குமலரே புளிக்காதமாமலரே
வாக்குமலரே கண்மலரே—மனோன்மணியே;

வஞ்சியர்செய் மோகமுடன் மறலிசெய்யும் நாசத்திற்கு
அஞ்சி உனக் கடிமையானேன்—மனோன்மணியே!
அடியாரும்வாழி இந்த அடியேனும் வாழிகுணங்
குடியாரும் வாழிகுணக் குன்றே மனோன்மணியே.

(இவ்வாறு பாடிமுடித்துவிட்டு அமைதியடைந்தார்கள்:)

(கூறப்பட்ட கவிதைகள் யாவும் இறைவனைப் பற்றியதே யாகும்.)

மறுநாள் காலை சில துறவிகள் குணங்குடியாரை அணுகினார்கள். அதில் ஒரு சன்னியாசி கேட்டார்;

சன்னியாசி:—சுவாமிகள் வெகுதூரம் போகின்றதோ?

குணங்:—மெய் வெளி நாடிதிசைவழி நடக்கின்றேன்.

சன்:—சுவாமிகளின் நாமம்?

குணங்:—இட்ட பெயர் "அப்துல்காதிர்;" யான் தொட்டபெயர் குணங்குடியான்.

சன்;—ஓஹோ! முஸ்லிம் துறவியோ? (மற்றவரைப் பார்க்கிறார்.)

குணங்:—ஏன் தயக்கம்?

சன்;—ஒன்றுமில்லே; தாங்கள் நேற்றிரவு பாடிய பாடலை உங்கள் மார்க்கம் ஒப்புக்கொள்ளுமா?

குணங்:—ஒப்புக்கொள்ளாமலென்ன; எல்லா மார்க்கமும் ஒரே பொருளைத்தான் குறிக்கோளாகக் கொண்டு நிற்கின்றன; அதிலே பேதங்கற்பிப்பது பிழை; அறிந்தவன் நிலேவேறு. நான் தமிழ் மொழியில் பித்துக்கொண்டவன். எனவேதான் இறைவனை வர்ணித்துப் பாடினேன்; எல்லாம் ஒன்றே.

சன்:— அப்படியா?

குணங்;—ஆம்!

மதபேதமோதி மறைக்கும்மறை சொல்வதெல்லாம்
கதையாய் முடித்துவைத்தாய் கண்ணே—
[பராபரமே;
சாத்திரங்கள் ஓதும் சழக்கர்தமக்குன் அருள்
மாத்திரைப் போதேனும்வருமோ—பராபரமே.

(இவ்வாறு குணங்குடியார் கூறி மவுனித்தார். துறவிகள் அவ்விடத்தைவிட்டு அகன்றனர்.)

பிறகு கோவிலைவிட்டு வெளியேறி மதுரையம் பதி நீங்கி நேராகத் தனது சொந்த ஊரான

தொண்டிமா நகரைநோக்கி இரண்டாவது முறை யாக வந்துகொண்டிருந்தார்கள்.

குணங்குடியாரின் புகழ் தமிழகமெங்கும் பரவி இருந்த காரணத்தால் இவர் தொண்டிமா நகர் வரு கின்றசெதி எப்படியோ பொதுமக்களுக்கு மத்தியிலே பரவிற்று. உடனே தொண்டி நம்புதாலை இந்து-முஸ் லிம்பொதுமக்கள் அனைவரும் ஒன்றுகூடி ஞானவள்ள லுக்கு நல்லதொரு வரவேற்புக் கொடுக்கவேண்டு மென்ற முடிவுக்குவந்தார்கள்: ஊர் முனையில் தோர ணங்கட்டி மங்களகீதத்தோடு மகானை வரவேற்கத் தயாராகி இருந்தார்கள். தன் மகனின் தவக்கோலத் தைக்காணவேண்டுமென்ற ஆவலோடு அந்த வர வேற்புக்குழுவில் குணங்குடியாரின் தந்தையும் உளம் பூரித்து நின்றார்கள்.

ஊர்மக்கள் இவ்வாறு ஏற்பாடு செய்ததை அறிந்திராத குணங்குடியார் சாதாரணமாக எளிமைத் தோற்றத்தோடு, கருத்த தாடியோடு, கருப்பு உடை யோடு, கையில் ஒருகோலுடன், வீரநடைபோட்டு தொண்டியம்பதியின் முகப்புவாயிலில்வந்து நுழைந்து கொண்டிருந்தார்கள்.

அவர்களைக்கண்டதும் பொதுமக்கள் சோபனம் என்ற வருகை வாழ்த்துக் கூறுகிறார்கள்.

(அரபிக் இசை)

இருவர்கள்:—மர்ஹபா... மர்ஹபா ..
மர்ஹபா;... மர்ஹபா...

மக்கள்:—வருகவே......! வருகவே......!
வருகவே......! வருகவே......!!

இருவர்:—ஆதிபெரியோன் அருளிய மறையின்
நீதி நபியின் நெறிவழிகண்டு
போதமகற்றி, நாதவாழ்வின், நடுமை அறிந்த
குணங்குடியானே....! மர்ஹபா...! மர்ஹபா !!

பொதுமக்கள்:—வருகவே...வருகவே வருகவே...
வருகவே. 1

இருவர்:—வேதமுடிவில் நின்றிடும் நோக்கு
சாதிபேதம் அகற்றிடும் போக்கு
ஓதியுணர்ந்து, உண்மையறிந்த, உத்தமஞானி
மஸ்தான் ஒலியே—மர்ஹபா...! மர்ஹபா...!!

பொது:— வருகவே...வருகவே...வருகவே...வருகவே.2

இருவர்.—பாலைவனத்தில் பிறந்த நம்மார்க்கம்
சோலைவனம்போல் செழித்தது யார்க்கும்
நாளைமரணம், வருமென்றறிந்து வேளையுணர்ந்தீர்
குணங்குடிஞானி மர்ஹபா! ...மர்ஹபா!!

பொது:—வருகவே...! வருகவே...! வருகவே...!
வருகவே!! 3

இருவர்:—கோழை வாழ்வை நம்பியுறங்கும்
ஏழைஎங்கள்மீதில் இறங்கி
வாழும் நிலையின் வழியைக்கூறும்வள்ளலே எங்கள்
குணங் குடிஅரசே...மர்ஹபா....! மர்ஹபா !!

பொது:—வருகவே...! வருகவே...! வருகவே...!
வருகவே !!

இருவர்:—சற்குணத்தின் சத்தியவடிவே
அற்புதத்திரு வெளியுறை முடிவே
நற்குணங்குடி வாழும் கோவே நானிலம்புகழ்
மஸ்த்தான் ஒலியே...! மர்ஹபா...! மர்ஹபா!!

எல்லோரும் வருகவே...! வருகவே...! வருகவே...!
வருகவே !!
வருகவே...! வருகவே...! வருகவே...! வருகவே!! 5

இவ்வாறு வாழ்த்துகின்ற இசையோடு குணங்குடிமஸ்தான் சாகிப் நடந்து தொண்டிவடக்குத் தெருவில் இருக்கும் மலுங்கு ஒலியுல்லா தர்காவில் போய்ச் சேர்ந்தார்கள்.

குணங்குடியார் அப்பள்ளியில் ஓரிடத்தில் அமர்ந்ததும் நரைத்த தாடியுள்ள ஒரு பெரியவரிதர் முன்னேவந்து குணங்குடியாரை நோக்கிக் கூறுகிறார்.

பெரியவர்:—(தளர்ந்தகுரலில்) நன்றாக இருக்கின்றாயா மகனே?

(தன் தந்தை என்றறிந்த குணங்குடியார் தாவி எழுந்து)

குணங்:—பாவா! தாங்களா!! இப்படி உட்காருங்கள்; தங்கள் மகன் என்றும் நன்றாகவே இருப்பான்.

தந்தை:—பரமுத்தனாகிய உன்னை மீண்டும் பார்த்ததே என்பாக்கியம்.

குணங்:—உங்களை எல்லாம் காணவேண்டுமென்ற ஆவலோடுதான் மீண்டும் இங்குவந்தேன் பாவா.

தந்தை:—உன் தாயார் உனது ஞாபகமாகவே இருக்கின்றார்கள்.

குணங்:—எனக்குந்தான் அம்மாவைப் பார்க்க வேண்டும்போல் ஏக்கமிருக்கிறது.

தந்தை:—அப்படியானால் வா மகனே! வீட்டுவரை போய்வரலாம்.

குணங்:—நல்லது பாவா.

குணங்குடியார் எழுந்து தன் தந்தையுடன் வீடு நோக்கிச் செல்கின்றார்கள். அங்கே தாயார், மாமியார், மைமூன், பிறர் மற்றும் அனைவரும் குணங்குடியாரை வரவேற்கின்றார்கள். மகனைக் கண்டதும் தாயார் அன்பொழுகத் தாவி அணைத்து உச்சிமோந்தும் நெற்றியில் முத்தமிட்டும் ஆதரிக்கின்றார்கள். தாயார் மகனை நோக்கிக் கூறுகிறார்:

தாயார்:—சுகமாக இருக்கிறாயா மகனே? ரொம்ப மெலிஞ்சு போனாப்போலே கண்ணு! (தாயின் கண்களில் கண்ணீர் வழிகிறது)

குணங்:—ஏனம்மா கலங்குகிறீர்கள்?

தேகத்தின் எலும்பு வெளியாகவாடினேன்
ஆகமச் சொற்படிக்கு அருளைக்கூடினேன்.

தாய்:—(கவலைச்சிரிப்புடன்) எதுக்கு எடுத்தாலும் கவியா? ஏதாவது பேசுடா—கண்ணு; ஆவலா இருக்கு.

குணாங்: — சரியம்மா! உங்களுடைய மகன் என்றென்றும் நல்ல நிலைமையில் இருப்பான்.

(இச்சமயம் தன் தம்பியும், மைமூனும் வந்து குணாங்குடியாரின் பாதத்தைத் தொட்டுக் கண்ணில் வைக்க எத்தனிக்கும்போது குணாங்குடியார் சட்டென்று அவர்களைத் தடுத்து)

குணாங்:—தம்பி! என்ன இது? புதியமுறை! இதெல்லாம் மார்க்கவிரோதமல்லவா? அளவுமீறி அன்பு காட்டுவதே கூடாதப்பா.

தம்பி:—தங்களைப் போன்ற உத்தமர்களின் பாதங்களைத் தொடுவதில் என்ன தவறு?

குணாங்:—ஆனால், நமது மார்க்கம், கணவன் பாதங்களை மனைவி தொட்டு மரியாதை செலுத்துவதைக் கூட கண்டிப்பாக மறுக்கிறது. அதைப் பேணுவது நமது கடமையல்லவா?

(எல்லோரும் பணிகின்றனர். பிறகு தனது தந்தையை நோக்கி.)

குணாங்;—பள்ளிக்குப் போகலாம் பாவா.

தந்தை:—சாப்பிடும் நேரமாகி விட்டதே?

குணாங்:— அதெல்லாம் வேண்டாமத்தா; பசி என்னுடைய நேயர்; பயம் என்னுடைய வாள்; உறக்கம் என்னுடைய விரோதி; வணக்கம் என்னுடைய காதலி.

தாய்:—சரிடா கண்ணு! என் கையாலே உனக்குச் சோறு போட்டு எத்தனையோ வருசமாச்சு; இன்னிக்கு என் ஆசையை மறுக்காதேப்பா?

குணங்:—சரியம்மா சாப்பிடுகிறேன்.

(எல்லோரும் சாப்பிட்டனர்; சாப்பிட்டு முடிந்ததும் வீட்டில் தாயாரிடம் பயணம் சொல்லிவிட்டு தந்தையும் தம்பியும் பின் தொடர மீண்டும் பள்ளி வாயில் வந்தடைந்தார்கள். இரவு ஒருவாறு கடந்தது மறுநாள் காலை தொண்டியம்பதி மக்கள் பள்ளியில் புடைசூழ்ந்திருக்கிறார்கள். அவர்களை நோக்கி குணங்குடியார் கூறுகிறார்கள் )

குணங்:— அறிவாளிகளே! நான் சென்னையம்பதி செல்லவேண்டும். அதற்குள் இப்போது நான் சொல்வதை நீங்கள் மனத்தில் பதியவைத்துச் செயல்படுங்கள்: [illegible] அடைவீர்கள்.
(குணங்குடியார் குருவணக்கம் பாடுகின்றார்கள்)

இணங்குபெருந்தூரனார் போரிலங்கையில்
இன்னமுதெடுத்தெமக்களிப்போன்
பிணங்கியகோச பாசமாம்பாவையைப்
பின்னலைப் பேர்த்தெறிந்திடுவோன்
வணங்கிய தவத்தினோர்க் கருள்புரிய
வள்ளலாய் வந்த மாதவத்தோன்
குணங்குடிவாழும் முகியித்தீனெம்
குருபதம் சிரத்தின்மேற் கொள்வாம்.

இவ்வாறு குருவணக்கம் பாடிவிட்டு, அங்கு குழுமி இருந்த மக்களை நோக்கிச் சொன்னார்கள்.

குணங்:—இப்போது நான் பாடுகின்றபடி நீங்களும் சேர்ந்து பாடவேண்டும். (குணங்குடியார் அழகாக வாய்திறந்து பாடுகிறார்கள்; பொதுமக்களும் அழகிய தொனியிலே பாடுகின்றார்கள்)

குணங்:—அல்லாஹு வென்னுங்கள்—சதாகாலம்
அல்லாஹு வென்னுங்கள். (அல்)

பொது:—அல்லாஹு வென்னுங்கள்—சதாகாலம்
அல்லாஹு வென்னுங்கள்.

குணங்:—அல்லாஹு வென்னுங்கள், அஞ்ஞானந்
[தனைவிட்டு
எல்லாரும்வெளிப்பட்டு இப்போது எதிர்பட்டு.(அல்)

பொது:—அல்லாஹு வென்னுங்கள்—சதாகாலம்
அல்லாஹு வென்னுங்கள்.

குணங்:—வகுத்த சோதி மெஞ்ஞான வாரிசை மனமுன்
வஞ்சமில் பரமார்த்த குருவருளிய தென்ன [ன
செகஜாலவலைதன்னுட் சிக்கிப்பலவு மின்ன
சிற்சொருபந்தெரியாமல் செத்திறந்து போமுன்னம்
(அல்)

பொது:—அல்லாஹு வென்னுங்கள்—சதாகாலம்
அல்லாஹு வென்னுங்கள். 1

குணங்:—அல்லாஹு வென்ற அரும்பொருளாமென்ன
அனந்த மறைகளும் அப்படியே பன்ன
நல்லறிவாளரும் நாளும் எடுத்துச்சொன்ன
நன்மையெல்லாம் மனக் குண்மையிலே மன்ன;
(அல்)

பொது:—அல்லாஹு வென்னுங்கள்—சதாகாலம்
அல்லாஹு வென்னுங்கள். 2

குணங்:—ஆசாபாசமென்னும் அழிபுத்திகளுமற்று
அளவிட்டறிய வொண்ணுதருண் ஞானந்தனைப்
[பெற்று

மாசற்று ஒளிருமுன் மனமிருவினையற்று
  மாதாபிதாவென்னும் மயல்முழுவதும் அற்று; (அல்)

பொது:—அல்லாஹு வென்னுங்கள்—சதாகாலம்
  அல்லாஹு வென்னுங்கள்.

குணங்:—மும்மலக்காட்டினை முழுவதையுமரிந்து
  மூலநெருப்பினை மூட்ட மூட்டவரிந்து
சின்மயஜெகஜோதித் தெளிதாவே தெரிந்து
  தேசிகன் குணங்குடி தெருவீதியில் இருந்து; (அல்)

பொது: - அல்லாஹு வென்னுங்கள் சதாகாலம்
  அல்லாஹு வென்னுங்கள்.

(பாடல் முடிந்தது)

குணங்குடியார் அவர்கள் தன் தந்தை முதல் கூடியிருந்த மக்கள் அனைவருக்கும் சலாம் கூறிவிட்டுப் பயணமானார்கள். தொண்டியின் வீதியைக் கடந்து செல்லும்பொழுது தன்னூருக்கு மகுடம் வைத்தது போல ஒரு கவிதையைப் பாடிக் கொண்டே செல்கின்றார்கள்.

குணங்:—

அண்டகோடிகளும் ஓர் அணுவைத்துளைத்ததில்
  அடக்கவல்லவர்கள் கோடி;
அறமியற்றினர்கோடி சாமுயற்றினர்கோடி
  ஆளான பேர்கள் கோடி;
தொண்டர் சிலகோடி உயர் அண்டர்பலகோடி
  நல்துறவோர் அனந்தகோடி;
சோதிகண்டுச்சி வெளிசென்ற பானம்பெரிய
  தொண்டிகண்டோர்கள் கோடி;

செண்டென்ன அகிலமேழையும் எடுத்தாட்டிச்
சிரித்துவருவார்கள் கோடி;
தேவரீர் சீடரடியேனும் உனை நம்பினேன்
தீட்சை தந்தாளுதற்கே;
வண்டுலவு மலர்மாலையுள்ள நீர் பின்தொடர
வள்ளல் இறசூல்வருகவே;
வளரும் அருள் நிறை குணங்குடி வாழும்
என் இருகண் மணியே முகியித்தீனே!

இவ்வாறு பாடிக்கொண்டே தொண்டிமாநகர் விட்டு நீங்கிய நமது ஞானவள்ளல் பல நாட்கள் கடந்து ஒருநாள் மாலை திருச்சி வந்துசேர்ந்து அங்கு துப்ரே ஆலம்பாதுஷா என்ற நத்தர் ஒலியுல்லா சமாதி கொண்டிருக்கும் தர்காவில் போய்த் தங்கினார்கள். இரவு மூன்றுமணி; குணங்குடியாருக்கு உறக்கம் கலைந்தது; எழுந்தார்; அமர்ந்தார்; பாடுகிறார்.

குணங்:—உணர்ந்து தற்பரமாய் உரைக்க அகோசரமாய்
உயிர்க்குயிரான சாகரமாய்.
இணங்கு சிற்பரமாய் அணுக்கள் தாபரமாய்
ஏகமாகிய பராபரமாய்;
வணங்கிக பரமாய்க்கிளைத்த நூர்முகம்மது
நலவிளக்கொளி கொழிக்கும்;
குணங்குடி வாழும் முகிய்யத்தீனும் என்
குருபதம் சிரத்தின் மேற்கொள்வாம். 1

வணங்குவார்க்கிணங்கு பெரியபேரின்ப
வாரியிற்படிந்து வாய் மடுத்தே
உணர்ந்து நும்பொருட்டாய் வலியவந்தெனையாண்
டுவந்துளங் களிதரமகிழ்ந்தே

அனைந்தணைந் தெடுக்குங்கருணை கொப்பளிக்கும்
அலகிலாவருளடைகிடக்கும்
குணங்குடிவாழும் முகிய்யத்தீனும் என்
குருபதம் சிரத்தின் மேற்கொள்வாம். 2

இவ்வாறு குணங்குடியார் பாடிக்கொண்டிருக்கும் போது ஒருமனித உருவம் கண்களை அகலவிரித்துக் கொண்டு ஆச்சரியக் குறியோடு இவருக்கு எதிரே வந்து நின்றது. நின்றவரைக் குணங்குடியார் நோக்கினார்; உருவம் பேசிற்று.

உருவம்:—அஸ்ஸலாமு அலைக்கும் துறவி!

குணங்:— வஅலைக்குமுஸ்ஸலாம், (ஆச்சரியத்தோடு பார்த்து) யார் புலவர் நாயகமா?

புலவர்:—ஆம்! ஆச்சரியமாக இருக்கிறதா?

குணங்:—இருக்காதா பின்னே ?

புல :—மனம்போல வாழ்வு.

குணங்:—ஆம். புலவரே! எங்கே இப்படி?

புல :—தங்களை நாடித்தான் சென்னைபம்பதி நோக்கிச் சென்று கொண்டிருக்கிறேன். வரும் வழியிலே இறைவன் நாட்டம் இப்படி.

குணங்:—மாஷா அல்லாஹ் — எண்ணப்படி இணைந்து விட்டோம். நாட்டம் நிறைவேறிவிட்டது. (புலவர் நாயகம் பக்கத்தில் அமருகிறார்; குணங்குடியாருக்குச் சந்தோஷம் பிறந்துவிட்டது; அவர் உற்சாகத்தோடு பாடுகிறார்.)

குணங்:—

அணைந்துயிர்க்குயிராய் அலர்மடல் அவிழ்ந்த
  அகண்டிதாகாரமா மலரின்
மணங்கமழ் நெயினார் முகம்மது வென்னும்
  மவுனதேசிகனுடன் எனையும்
துணிந்து மாமாயைத் துகிலையெலாங்கிழித்துத்
  துறவறந் தாங்கியானுக்கும்
குணங்குடிவாழும் முகிய்யத்தீனும் என்
  குருபதம் சிரத்தின்மேற் கொள்வாம். 3

இவ்வாறு பாடி முடித்து மௌனித்தார் குணங்குடியார். பொழுது புலர்ந்தது; மறுநாள் காலை புலவர் நாயகத்தை நோக்கி குணங்குடியார் கூறினார்.

குணங்:—புறப்படலாமா புலவரே?

புல:—நாட்டப்படி நடக்கட்டும். (இருவரும் திருச்சி நகர்விட்டு சென்னையம்பதி நோக்கி நடக்கலானார்கள்.)

பலப்பல ஊர்களை எல்லாம் கடந்து இறுதியாக பொன்னை மாநிதி போற்றும் சென்னைமா நகர் வந்து சேர்ந்தார்கள்.

சென்னையிலே அச்சமயம் மக்கள் நடமாட்டம் குறைந்த இடமான காவாங்தோப்பு என்ற ஒருகாட்டுப் பகுதியில் ஓரிடத்தில் தானும் தன் தோழரும் தனித்துத் தவமியற்றிவந்தார்கள்.

(குறிப்பு:—குணங்குடியார் தனித்திருந்த அந்த இடந்தான் இன்று தண்டையார்பேட்டை என்று வழங்குகிறது. அவரிடம் சிலர் வந்து; தத்துவம் பேசிவிட்டுப் பிறகு ஊரைக் கேட்டவர்களுக்குத்

தொண்டி என்று சொன்ன காரணத்தால் அந்த இடத்தை அப்போது வாழ்ந்தமக்கள் தொண்டியார் பேட்டை என்றழைத்தார்கள். வெள்ளையனும் அதே பெயரை ஆங்கிலத்தில் எழுதினான் அதுவரவர காலப்போக்கில்மாறி தொண்டியார் பேட்டை (Tondiarpettai.) என்று ஆங்கிலத்தில் சரியாக இருந்தும் தமிழ்ச்சொல்மருவி பொது மக்களால் அது இன்று தண்டையார் பேட்டை என்று அழைக்கப்படுகிறது.)

இவ்வாறு அந்த இடத்தில் இருந்த குணங்குடியாரின் புகழ் பொதுமக்களுக்கு மத்தியிலே பரவலா யிற்று.

ஒருநாள் பொதுமக்களில் சிலர் குணங்குடியாரின் சமூகத்தில் வந்தார்கள். (வந்தவர்களை நோக்கி)

குணங்:—என்ன வேண்டும் உங்களுக்கு?

பொது:—தங்களின் ஆசி வேண்டும்.

குணங்:— அப்படியா!

ஒருவர்:—பாவா! நீண்ட காலமாக எனக்கு சந்தானமே இல்லை.

குணங்:—ஓஹோ!

வேறொருவர்:—எனக்கு முதல் குழந்தை பிறந்து ஐந்துவருடமாகிறது. இரண்டாவது குழந்தை இதுவரை பிறக்கவே இல்லைபாவா!

குணங்:— ஹாய்! ஹாய்!!

இன்னொருவர்:—பாவா! எனக்கு அஞ்சு பொறந்துச்சு; ஆனால் அஞ்சும் பொண்ணா போச்சு. ஒண்ணு

கூட ஆண்பிறக்கலை. அதுக்குத்தான் நாடி வந்தேன்.

துணை:—ஹும், பாவம்! முதல்வருக்கு இல்லை என்ற குறை; இரண்டாமவருக்குப் போதவில்லை என்ற குறை; மூன்றுமவருக்குத் திருப்தி இல்லை என்ற குறை; இதற்கு நான் வழி சொல்லவேண்டும்! இவை எல்லாம் மனோ நிறைவில்லாத கூத்து. லாஹவ்ல வலாகுவ்வத இல்லா பில்லாஹ். (எல்லாம் வல்ல இறைவன் நாட்டப்படியே!) (வந்தவர்களை நோக்கி)

துணை:—அன்பர்களே! எதிலும் போதும் என்ற மனமே பொன் செய்யும் மருந்து. உலகில் இறைவன் கட்டளையில் உள்ளது எதுவுமே தப்பாது. உங்களுக்கு அவன் நாட்டத்தில் உள்ளது நிச்சயம் கிடைத்தே தீரும். ஆனால், நான் ஒன்று சொல்கின்றேன். கவனியுங்கள்

உலகில் எதனை ஒருவன் அதிகமாக எல்லைகடந்து ஆசிக்கின்றானோ ஒருவேளை அதைக்கொண்டே அவனுக்கு அதிகமான வேதனையும் துயரமும் ஏற்படவுஞ் செய்யலாம். உதாரணமாக ஒரு காலத்தில் குழந்தை பிறக்கவேண்டுமே என்று கோவில் குளங்கள் எல்லாம் நாடிப்போய் நோன்பு நோற்றுமக்களைப் பெற்றவர்கள் பிறிதொரு காலத்தில் இனிச் சந்தானமே வேண்டாமென்று தெய்வத்தைப் பிரார்த்திக்கவும் செய்யலாம்; எனவே ஒரு சந்தர்ப்பத்தில் அவசியம் தேவை என்று கருதப்படுவது மறு சந்தர்ப்பத்தில் புறக்கணிக்கப்படவுஞ் செய்யலாம்; வளரும்;

தளரும்; வற்றும்; பெருகும் இதுதான்; உலகநியதி. ஆகவே நீங்கள் இறைவன்பேரில் நம்பிக்கை வைத்து மனக்கவலைவிடுத்து வீடுசெல்லுங்கள்; காட்டப் பூர்த்தியாகும். (வந்தவர்கள் மவுனமாகச் செல்கின்றனர்; குணங்குடியார் அமைதியடைகிறார்.)

இவ்வாறு இதே இடத்தில் மூவாண்டுகள் கடந்தன. அச்சமயம் தமிழறிந்த வல்லுனர்களான திருத்தணிகை மகாவித்வான் சரவணப் பெருமாள் ஐயரவர்கள், சிவயோகி ஐயாசாமி முதலியார், வெங்கடராயப் பிள்ளை, கோவளம் அருணாசல முதலியார், மகன் சபாபதி முதலியார், பாவாலெப்பை ஆக இந்த ஐவரும் குணங்குடியாரின் சீடரானார்கள்.

பிறகு காவாந்தோப்பில் உள்ள பாவாலெப்பையின் இடத்தில் ஒரு குடில் அமைத்து குணங்குடியார் தவமியற்றிவந்தார்கள். இச்சமயம் தான் குணங்குடி மஸ்தான்பாடல் முழுவதும் எழுதி முடித்தார்கள்.

வித்தகச்சித்தன் குணங்குடியாரின் புகழ் மக்கள் மத்தியிலே பரவி இறுதியாக அச்சமயம் சென்னையம்பதியை ஆண்ட நவாபு காதிலும் எட்டிற்று. தெய்வ பக்தியுடைய நவாபு இவரைக் காணவேண்டுமென்று ஆசை கொண்டார்; இந்த ஆவல் எழுந்த அதே இரவு குணங்குடியாரைக் கனவிலுங் கண்டார்.

விடிந்ததும் இருபெரியமனிதர்களைக் குணங்குடியார் இருக்குமிடத்திற்கு அனுப்பி மரியாதையோடு அழைத்துவரச் செய்தார்; அழைப்பை ஏற்று குணங்குடியாரும் அரண்மனைக்கு வந்தார்கள்.

குணங்குடியாரின் தேஜோமயமான முகத்தைக் கண்டதும் நவாபு தனது ஆசனம் விட்டெழுந்துவந்து மரியாதையாக அழைத்துச்சென்று ஆசனத்தமர்த்தினர். குணங்குடியாரும் அமர்ந்தார். இருவருக்கு மிடையில் அறிவுரை ஆரம்பமாயிற்று. (இது நடந்தது கி. பி. 1825)

குணங்: — அரசே! இந்தப்பரதேசியைத்தாங்கள் அழைக்கழைத்த நோக்கம்?

நவாபு:— அகமியம்பற்றி தெளிவுபெறத்தான். பாவா!

குணங்:— அப்படியா! எதைப்பற்றி ஐயம்?

நவாபு: — இறைவனோடு மனிதன் ஐக்கியப்படுவது எப்படி?

குணங்:—வணக்கம் என்றதவத்தில் தன்னைமறக்கும் போது.

நவாபு: — மனத்தின் ஆட்டத்தை நிறுத்துவது முடியுமா?

குணங்:—முடியாது. ஆனல் தவத்தின் மூலமாக இறைவனுக்கு நேர்படுகின்றபோது மன ஆட்டம் தானுக நிற்கும்.

நவாபு:—இரண்டறக்கலப்பது என்றால் எப்படி?

குணங்: — ஜீவாத்மா என்றமனம் பரமாத்மாவென்ற இறைவனோடு ஐக்கியமடைவதுதான் இரண்டற்ற நிலை.

நவாபு:—முத்தியின் முடிவு?

குணங்:—சித்தநாசம்.

நவாபு:—முத்தன் யார்?

குணங்:- அவன்தான் ஞானி. உள்ளும் புறமும் எல்லாம் வெளியான பரம்பொருளோடு. சதா வணக்கத்தில் ஈடுபட்டுப் பிரியா நிலையில் இருப்பவனே பரமுத்தன்; அவ்லியா, குதுபு, ஞானி என்பவர்களும் இவர்களே.

நவாபு:— ஆஹா! அருமை! அருமை! தெளிவான விளக்கம்!

குணங்—நவாபு! நீர் ஓரளவு பக்குவமடைந்தவர் ஆகவே விளக்கினேன்; விளக்கத்தை ஒருவாறு புரிந்திருக்கிறீர். ஆனால் புரிந்தால் மட்டும் போதாது; அறியவும் வேண்டும்.

நவாபு:— அறிவதற்கு என்ன வழி?

குணங்:— அது சொல்லாமல் சொல்லும் ஓர் மொழி. இதோ!

இல்லல்லாஹு வென்று என்னை மறந்து கொண்டு
  இருப்பாய் என் நெஞ்சமே;

அல்லாஹு வென்ற அகண்டித கண்டமா
  நல்லா யிருக்குது காணும்—ஒரு
சொல்லாலே இப்படித் தோணும்—வெகு
  உல்லாசமாய் லாயிலாஹு (இல்லல்லாஹு)

அண்டபுவனங்கள் என்றும் இருப்பதை
  யாதென்று அறியாது தானே—எங்கும்
நின்று நிறைந்து மறைந்து சிறந்த
  நெடிய நிராமயம் தானே—முதல்

பண்டு பழகிய நாட்டத்துக்கே யது
    பாவைக் கூத் தானதுதானே—நீ
கண்டுகளித்துச்சகலமும் விட்டுக்
    கரையேறிஞல் நலந்தானே—தான்
சென்றவிடஞ் செயந்தானே—தன்னைக்
    கண்டு கொண்டுலாயிலாஹ. (இல்லல்லாஹு) 1

இல்லல்லாஹு வென்றேநான் இராமல்
    இணைபடவும் இருந்தேனே—மெத்த
நல்லநேரன்புடன் தொழுகையும் விட்டு
    நலங்களையும் மறந்தேனே—தன்னை
வெல்லுங் குருபரன் சொல்லிய தீட்சை
    வினவாமல் விட்டிருந்தேனே—அதை
அல்லும்பகலும் அறியாமல் என்னுள்ளே
    ஆபாசமாக் குவித்தேனே—இது
எல்லாம் அறிந்திருந்தானே—சொல்லுஞ்
    சொல்லுஞ் சொல்லும்லாயிலாஹ (இல்லல்லாஹு)
2

பூசைகள் செய்கிறேனென்று திரிந்து
    புலம்பியபாப மும்போக்கி—பெண்கள்
ஆசையினலே அநேகந்தரங்கள்
    அடிபட்டதும் லகுவாக்கி—எங்கள்
ஈசன் திருவடி யாசையுள்ளான பின்
    என்னைக்கையால் அவர்தூக்கி—அந்த
தோசித்தனங்கள் தொலையத் தொழும்நற்
    றுறைகளைப் போதனையாக்கி—கெட்ட
பாசங்களைகளை விட்டு நீக்கி—தந்த
    வாசியுடன் லாயிலாஹ. (இல்லல்லாஹு) 3

என்ன விதம்என்று சொல்வேன் முழக்கம்
முழங்குவ தென்னுக் குள்ளாலே—ஒரு
அன்னம் இருந்து அழகு பிறக்க
அசைந் தசைந்தாடுவதாலே—அதன்
முன்னாலேயான் செய்த பாக்கியங்கண்டு
மூன்றுசை யில்லாததாலே—அது
தன்னாலே ஆனந்த வெள்ளம் பெருகித்
தடையறப் பாய்வதனாலே—பயிர்
அன்னப்பிடிப்பதனாலே—உனக்கு
என்னகுறைலாயிலாஹ (இல்லல்லாஹு) 4

வாசனையாகிய மாசற்றவஸ்துவும்
வாக்குமனத்துக் கெட்டாதே—அதில்
ஆசைக்கடல் பொங்கிபோசையுடன் அலை
ஆடிடு மொன்றுங்கட்டாதே—இந்த
நாசச்சரீரத்தை வாசியிற்றிட்டிடில்
நாசத்தை அண்ட வொட்டாதே—நல்ல
யோசனை செய்யுங்குணங்குடி வந்திடில்
யோகம் உனக்குக் குன்றுதே—ஒரு
மாசற்றயா கூ வென்றேதே—காசில்
ஆசை விட்டேலாயிலாஹ. 5

இல்லல்லாஹுவென்று என்னைமறந்து கொண்டு
இருப்பாய் என்நெஞ்சமே.

அரசே! மரணம் இருக்கின்றதே; அது இருவகைப் படும்; அதாவது மவுத்து ஹகீக்கி மவுத்து இராதீ எனப்படும்; மவுத்து ஹகீக்கீ என்பது உடல்மரணம். இதுசாதாரண மனிதர்களுக்கு ஏற்படுவது. மவுத்து இராதீ என்பது பாவனையான மரணம். இது ஒலிமார்

களென்றஞானிகளுக்குரியது. ஆனால் மரணம் உடலுக்கேயன்றி ஆன்மாவுக்கு இல்லை. ஞானிகள் வணக்கமென்ற தலத்தில் சதாயிடுபட்டுச் சாகாமல் சாகு முன்செத்திருக்கின்ற காரணத்தால் மரணபயம் அவர்களுக்கு இல்லை. மேலும் வெளியோடு கூடுகின்ற மனம் இறைவணக்கத்தில் நிர்விகற்ப நிலையில்பரத்தோடு ஐக்யமாக இருந்து ஒடுங்கிவிடுவதுதான் சமாதி எனப்படும். அவர்கள் தூலதேகத்தை விடுத்து சூட்சமதேகத்தோடு மறைந்து சிரஞ்சீவியாக வாழ்கின்றார்கள். இந்த நிலை மாருத்தியானம் செய்கின்ற அப்பியாசிகளுக்குத்தான் சாத்தியப்படும். இவை தான் அஞ்ஞானிகளுக்கும் மெஞ்ஞானிகளுக்கும் உள்ள வேறுபாடு.

நவாபு:— என் அறிவைத் தெளிவித்த உங்களுக்கு இந்த அடிமையால் ஏதேனும் ஆகவேண்டியதிருந்தால் கூறுங்கள் பாவா?

குணங்:— வேண்டியதில்லை. உமக்கே ஒன்றுமில்லா நிலை; அப்படி இருக்க உம்மால் எனக்கென்ன தர முடியும்?

நவாபு:—ஏன்பாவா அப்படிச் சொல்கிறீர்கள்?

குணங்:— ஆம்! எல்லாம் போகப்போக உண்மை புரியும். ஆனால், ஒன்று செய்வீரா?

நவாபு:—சொல்லுங்கள் பாவா!

குணங்:—நான் தனிமை என்ற கல்வத்தில் அமர்ந்து அமலன் இஹ்லாஸ் என்ற நிர்விகற்ப சமாதியில் சிலவருடங்கள் இருக்க எண்ணுகிறேன். அதற்கு நீர் ஒரு கட்டிடம் எழுப்பித் தரமுடியுமா?

நவாபு:— உடனே செய்து முடிக்கிறேன்.

குணங்:— சந்தோஷம்; நேரமாகிறது நான் போய் வருகிறேன். (எழுந்தார்)

நவாபு:— அஸ்ஸலாமு அலைக்கும்.

குணங்:— வ அலைக்கு முஸ்ஸலாம்.

(குணங்குடியார் தனது இருப்பிடம் நோக்கிச் செல்கின்றார்; நவாபு அவரையே ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டிருக்கிறார்.)

இவ்வாறு அமைதியாக சில நாட்கள் கழிந்தன. ஒருநாள் சென்னை நவாபு தூதுவர்கள் மூலமாக வாகனமனுப்பி குணங்குடியாரை அரண்மனைக்கு அழைத்துவரச்செய்து பல சம்பாஷணைகளுக்குப் பிறகு கட்டிடவேலைகள் பூர்த்தியாகிவிட்டதை அறிவித்தார். உடனே குணங்குடியார் அளவற்ற மகிழ்ச்சியோடு.

குணை:— அல்ஹம்துலில்லாஹ்! (இறைவனுக்கே புகழ்) நவாபே! நானே என் குருநாதரான முகியித்தீன் ஆண்டகைக்கு மவ்லூது ஓதிவிட்டு, மறுநாள் வெள்ளிக்கிழமை தொழுகைக்குப் பிறகு கல்வத்தில் இருக்க நாடுகின்றேன்.

நவாபு:-- தேவரீர் நாட்டப்படி. (கவலையோடு மவுனம்.)

குணங்:— அல்லாபோதும்; நான் போய்வருகிறேன்.

(இவ்வாறு கூறி அங்கிருந்து வாகனத்தில் புறப் பட்டு தன் இருப்பிடம் வந்து சேர்ந்ததும் சந்தோஷத் தோடு புலவர் நாயகத்தை நோக்கி.)

குணங்:—புலவர் நாயகமே! வெள்ளிக்கிழமை நான் கல்வத்தமரவேண்டும்; அதற்கு நாளைக்கே என் குரு மகுபூபுசுபுஹானியவர்களுக்கு ஒருமவ்லூது ஓதவேண்டும்; அதற்குரிய ஏற்பாடு செய்யுங்கள்.

உடனே ஏற்பாடு செய்யப்பட்டது. பக்தர்கள் அனைவரும் கூடினர். சென்னைநவாபும் வருகைதந் திருந்தார்; பிரார்த்தனை சிறப்பாக நடந்தது. விழாக் கோலம் முடிந்தது. அனைவரும் கலைந்தனர்.

மறுநாள் வெள்ளிக்கிழமை ஜும்ஆத் தொழு வதற்காகக் குணங்குடியார் புலவர் நாயகத்துடன் அங்கப்ப நாயக்கன் வீதியில் உள்ள நவாபு பள்ளிக்கு வந்து சேர்ந்தார்கள். அவரது பக்தர்களும் ஏராள மாக பள்ளிக்கு வந்து சேர்ந்தனர். அதே சமயம், சென்னை நவாபும் அப்பள்ளிக்குத் தொழ வந்து சேர்ந் தார். குத்பா (பிரசங்கம்) முடிந்து தொழுகை ஆரம்பித்தது; நமது ஞானவள்ளல் குணங்குடியார் தான் இமாமாக நின்று ஜும்ஆத் தொழுகையை நடத் தினார்கள். தொழுகை முடிந்ததும் எல்லோருமாகச் சேர்ந்து குணங்குடியாரை பல்லக்கில் ஏற்றிவைத்து ராயபுரத்தில் உள்ள கல்வத்துக் கட்டிடத்திற்கு ஊர்வலமாகப் போக எண்ணினார்கள். வீண் ஆடம் பரத்தையும் தற்பெருமையையும் விரும்பாத குணங் குடியார் பல்லக்கில் ஏறுவதை மறுத்து தாமும் எல்லோரும்போல நடந்து வருவதாகக்கூறி, நவாபும், புலவர் நாயகமும் பக்கத்தில்வர, பொதுமக்க ளெல் லாம் பின்தொடரக் குணங்குடியார் ராயபுரம் நோக்கி நடந்து செல்கின்றார்கள். செல்லும்போது அவர்கள் பவளவாய் திறந்து இனிமையோடு பாடுகிறார்கள்.

தேஷ்—இராகம்

பல்லவி

குணங்:—பரமுத்தன் குணங்குடி தெருவில் வரும்பவனி
பார்த்து வருவோம் வாருங்கள்.

அநுபல்லவி

வரமுத்தசுரர்களைந் தாமுற்றவர்களிரு
பரமொய்த்திரியாதி நரமுத்தியருளும்நம். (பர)
அனைவரும்:—பரமுத்தன் குணங்குடி தெருவில்
பார்த்து வருவோம் வாருங்கள். [வரும் பவனி

சரணம்

குணங்:—சாத்திர வேதம் சலாம் சலாம்—சலாம் என
ஜகஜோதி மின்னல் பளீர்பளீர்—பளீர் என
போர்த்துள்ளம் போற்றும் ரஹீம் ரஹீம்—ரஹீம் என
பிசுமில்லா ஹிர்ரகுமா னிர்ரஹீம் என்றுள்ளம்
அசையாமல் ஒருநிலை விசுவாச மருளும் நம். (பர)
அனைவரும்:—பரமுத்தன் குணங்குடி தெருவில்
பார்த்து வருவோம் வாருங்கள். [வரும்பவனி 1

குண: கருமமத்தனை தாளந் திடிப்திடில்—திடில் என
கைம்மணியோசைக் கணீல் கணீல்—கணீல் என
திருவருள் ஆட்டம் திடும் திடும்—திடும் என
தினத்தந்தோம், தினத்தந்தோம், மனத்தொந்
[தோம், மனத்தொந்தோம்
உளத்தில் அனைத்தையும் நினைத்த படியாகநம் (பர)
அனைவரும்:—பரமுத்தன் குணங்குடி தெருவில்
பார்த்துவருவோம் வாருங்கள். [வரும்பவனி 2

குணங்:—நாசச்சரீரம் நரேல் நரேல்—நரேலென்ன
நஞ்ச வினைகள் சரேல் சரேல்—சரேலென்ன
வீசுமருட்கள் விறீல் விறீல்—விறீலென்ன
வேதவாளெடுத்தேந்தி சோதி வாசியில்ஏறி
ஆதி பிசுமிலுடன் ஓதுங்கலிமாவை நம் (பா)
அனைவரும்:—பரமுத்தன் குணங்குடி தெருவில் வரும்
பார்த்துவருவோம் வாருங்கள். [பவனி 3

குணங்:—நாடாதபேர்கள் பயம் பயம்—பயம் என
நம்பியபேர்கள் ஜயம் ஜயம்—ஜயம் என
தேடியபேர்கள் நயம் நயம்—நயம் என
திக்குத்திசை களெங்கும் மிக்க ஒளிபரப்பி
ஒக்கவுலகமொரு கைக்குள் அடக்கும்நம் (பா)
அனைவரும்:—பரமுத்தன் குணங்குடி தெருவில்
பார்த்துவருவோம் வாருங்கள். [வரும்பவனி

*இவ்வாறு வீதியில்பாடிக் கொண்டே ராயபுரம் வந்து கட்டிடத்து எல்லைக்கு வந்துசேர்ந்தார்கள்; அப்போது குணங்குடியாரின் சீடர்களான மகா வித்வான் சரவணப்பெருமாள்ஐயர், ஐயாச்சாமிமுதலியார், வேங்கடராயப் பிள்ளை, சபாபதிமுதலியார், பாவாலெப்பை ஆகிய ஐவர்களும் ஏற்கனவே அந்தக் கட்டிடத்திற்கு வந்து இருந்தார்கள். குணங்குடிச்சித்தனை அவர்கள் வரவேற்றார்கள். வந்த கூட்டம் ஒருங்கே குழுமியது இப்போது குணங்குடியார் சபையோரைநோக்கி மிகவும் அமைதியோடு கூறுகிறார்கள். (எங்கும் நிசப்தம்).*

*குணங்:-மதிப்பிற்குரிய சபையோர்களே! அஸ்ஸலாமு அலைக்கும். சற்றுநேரத்திற்குள் அடியேன் இந்த மண்மண்டபத்தில் நுழையப் போகிறேன்.*

இனி நாம் சந்திப்பதென்றால் அது இறைவன் நாட்டத்தில் உள்ளது. ஏனென்றால், இப்போது நான்.—

என்னிலை தன்னையறிந்து—என்னுள்
இருந்தாடும் சூத்திரம் பொருந்திடம் அறிந்து
அன்னிய நிலைகளைத் துறந்து—குருவருளினால்
அனுதினம் மருளெல்லா மறிந்து; 1

நற்பூச்சந்தன வத்தர்பூசி—மிக
நன்றாக வைத்தாலும் நாற்றமே வீசி
எப்போதுங் கொடுமை செய்தோசி—என்று
இவ்வுடல் வாழ்வுகள் யாவையும் வீசி. 2

சொற்கடங்காச்சுக ஞானம்—தன்னில்
சும்மா விருக்கும் சுகமதே மோனம்
எட்கிடையாயினும் பானம்—தன்னை
எடுத்துண்டு இருப்பதற்கு இச்சித்தேயானும்; 3

நாசி நுனியிடை நின்று—நல்ல
நடனம்புரிவதைக் கலீர் கலீர் என்று
வாசியில் ஏறிக் கொண் டின்று—காண
வைத்த குருபரன் தாளினைப் போற்றி,
இரக்கத்துணிந்து கொண்டேனே;
எனக்கு இருக்கும் குறை முழுதும் நிகழ்த்திக்
[கொண்டேனே. 4

நான் ஒருகாலவரையரையின்றி கல்வத்திருப்பதற்காக இந்த இல்லத்தில் நுழையப் போகின்றேன்; அதற்கிடையில் அறிவுடைய நீங்கள் இறுதியாக இந்தப் பித்தன் கூறப்போவதைக் கவனத்தில் வையுங்கள்.

அதாவது, எந்நிலைவந்தாலும் இறைவணக்கத்தைக் கைவிடாதீர்கள். சகஜநிஷ்டையை விட்டவனுக்கே எல்லாத்தொல்லைகளும் துயரங்களும் சம்பவிக்கும்; இறுதியில் மனோசாந்தி வேண்டுமானால், பழகப்பழகிவரும் பாக்கியத்தைப் பைமுதலைக் களவுகொடுத்துவிடாதீர்கள். துலங்கும் அருள் மயத்தை மறைத்துக் கொண்டிருக்கின்ற இருள்மயமான புலனுதிகளின் இச்சைகளைத் தொலைப்பதற்கு ஓரே வழி தவம் என்றவணக்கத்தைத்தவிர வேறு எதுவுமே நிச்சயமாக இல்லை. ஆகவே, காலம் போகும்; ஆனால் திரும்பிவராது; இப்போதே மூலத்தைக் கடைப்பிடித்துப் முக்திபெற்றுவாழுங்கள். நான் வருகிறேன்; அஸ்ஸலாமு அலைக்கும்.

பொதுமக்கள்: — வஅலைக்கு முஸ்ஸலாம். (விண் அதிரும் சப்தம்.)

கூட்டத்தில் எங்கும் ஒரே அமைதி. எல்லோரும் குணங்குடியாரின் மதிவதனத்தையே நோக்கி நிற்கின்றார்கள். பிறகு, எப்போதும் வற்றாதவாய் மொழி பகர்ந்து கொண்டிருந்த அறிவுச்சிகரமான ஞானக்களஞ்சியம் குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்கள் அமைதியோடு ஏக ரப்பில்ஆலமீனான இறைவனின் நோட்டத்தில் அமலன் இஹ்லாஸ் என்ற நிருவிகற்பநிட்டை புரிவதற்கு, திடசங்கற்பவைராக்கியமனத்தோடு கி, பி. 1830-ல் தனது நாற்பதாவது வயதில், கையில் ஏடு எழுத்தாணியோடு தவச்சாலையின் உள்ளே காலெடுத்துவைத்தார்கள். உள்ளே நுழைந்ததும் கதவைத்தாளிட்டுக் கொண்டார்கள்.

தனித்து இருந்து அன்ன ஆகாரமின்றி ஆங்கார மற்று, சுகமற்று, துக்கமற்று, ஐம்புலப்பாசமற்று, அல்லாஹ்வின் பாதையிலே மாதவம் செய்ய ஆரம்பித்துவிட்டார்கள் நமது ஞானத்திலகம்.

வந்த கூட்டங்கள் கலைந்தன. குணங்குடியாரின் அருமைச் சீடர்களனைவரும் இனிமேல் தன் குருநாதரின் திருமுகத்தைப் பார்க்க முடியாதே, அறிவுத் தெளிவுரையைக் கேட்கமுடியாதே என்ற ஏக்கத்தில் வாடிய முகத்தோடு தந்தம் வீடு திரும்பினார்கள். ஆனால் புலவர் நாயகம் மட்டும் அதே இடத்தில் தங்கி இருந்து காலங் கடத்தினார்கள். இவ்வாறு கடந்தன ஏழு ஆண்டுகள். எட்டாவது ஆண்டிலே ஒருநாள்— இறைமறையளித்த ரமலான் மாதம் நோன்புப்பிறை 27-வது இரவு புலவர்நாயகம் உறங்கிக் கொண்டிருந்தார். அப்போது குணங்குடியார் அழகிய தோற்றத்துடன் அவர் முன்வந்தார்கள். அவரைக் கண்டதும் புலவர் ஆவலோடு எழுந்துவரவேற்றார்; புலவரைப்பார்த்து குணங்குடியார் அமைதியோடு சொல்கிறார்.

குணங்:— புலவர் நாயகமே; ஒருமுக்கியம்; அதாவது என் உலகவாழ்க்கை இந்த புனித ரமளான் மாதத்தோடு பூர்த்தியாகி விட்டது. அதனால் என் காலத்தை முடித்துக்கொண்டு என் சடத்தைக் காவாந்தோப்பு மயான பூமியில் கிடத்தி இருக்கிறேன். நீங்கள் அதை எடுத்துப்பிரபல்யப்படுத்தி அடக்கவேண்டாம். நிச்சயம் அது எனக்குப் பிடிக்காதஒன்று. அதனால் இப்போதே சென்று இந்த மகத்தான கண்ணியமிக்க லைலத்துல்கத்ரு என்ற இன்றிரவு விடிவதற்குள்ளாக என்சடத்தை நல் அடக்கம் செய்துவிடுங்கள்.

புலவர்;— ஆணைப்படி ஆற்றுகிறேன்.

குணங்:—சந்தோஷம்! அஸ்ஸலாமு அலைக்கும்.

புல:—வ அலைக்குமுஸ்ஸலாம். இதோ! (எழுந்தார்)

ஆனால் குணங்குடியார் அங்கில்லை. திடுக்கிட்ட புலவர், நண்பா!! என்ற அலறலோடு கண் விழித்தார்; தான் இதுவரைக் கண்டது கனவென்பதை யுணர்ந்தார். என்றாலும் நடந்தவை உண்மையாக இருக்கும் என்ற நம்பிக்கையில் அதேநேரத்தில் பாவாலெப்பை என்பவரைத் தேடிப்புறப்பட்டார்; சந்தித்தார்.

இதேபோன்று மற்றசீடர்களுக்கும் குணங்குடியார் கனவில் தெரிவித்தபடியால் காவாங் தோப்பில் உள்ளபாவா லெப்பையின் இல்லத்திற்கு வந்துசேர்ந்தார்கள். பிறகு எல்லோரும் காவாந்தோப்புமயான கண்டத்தை நோக்கி நடந்தார்கள் அந்நடுநிசியில். அங்கே ஒரு மரத்தடியில் இருந்து நறுமணமான வாடை வந்தது; சென்று பார்த்தார்கள். அவ்விடத்தில் சந்தன மணங்கமழ மையித்துக்குரிய கபன் உடையோடு ஞானவள்ளல் குணங்குடியாரின் பூதவுடல் கிடந்தது. ஞானக்களஞ்சியமான சாந்தமே உருவெடுத்த மாமேதையின் பூதவுடல் மண்ணிலே கிடக்கக் கண்ட சீடர்கள் உள்ளமுருகிக் கண்ணீர்மல்க அம் மகானின் சடத்தைச் சுமந்து அந்த இரவில் ராயபுரத்திலுள்ள பாவாலெப்பையின் இடத்தில் நல்லடக்கம் செய்தார்கள். (இன்னாலில்லாஹி, நிச்சயமாக எல்லோரும் இறையளவிலே மீளுகின்றோம்.)

குணங்குடியாரை அடக்கியபின் சீடர்கள் புகழ்ந்து பாடி முடிப்பதற்கும், பகலவன் உதிப்பதற்கும் சரியாக இருந்தது.

விடிந்தது பொழுது—முடிந்தது வரலாறு.

—: ✽ :—

## என் பாட்டனாருக்கு என்னுடைய பாமாலை

மாதாவயிற்றிருந்தவதரித்து தொண்டிமா நகரிலே
[வளர்ந்து
வேதாகமங் கல்வியாவையும் கற்றபின் தமிழ்
[அரபிவித்வமணியாய்
தேர்ச்சிகளடைந்துபின் திருமணஞ் செய்வதற்
[கிச்சையே கொண்டிடாமல்
பதினேழுவயதிலே துறவெய்தி தொண்டிவாழைத்
[தோப்பு எனுமிடத்தில்
மூன்றுமண்டலமதாய் சிந்தனையிலேமேவி குருமுகப்
[பார்வையோடு
புவியாசை நீத்துப்பதினைந்து வருடங்களாய்க்
[காடுமலையில் தனித்து
முடிவாக சென்னையில் தொண்டியார்பேட்டையில்
[மூவாண்டு தவமிருந்து
வெளிவந்து மக்களுக்குபதேசம நல்கி நவாபு
[வந்தடிகள் போற்ற
அன்னாரின் உதவியால் ஈராறுவருடங்கள் அத்துவித
[நிட்டை மேவத்
தங்கியஇடத்திலே தற்பதப்பொருளோடு ஒன்றிச்
[சமாதியாகுய்;
கோணுகி உலகெலாம்துதிபெற்று முத்திக்குவித்தான
[மோனகுருவே!
சீர் பொங்கு சென்னையில் ராயபுரம்மீது வளர்
நற்குணங்குடிநாதனே! 1

ஆதியோடந்தநடுவற்ற பெருவெளியிலே ஆனந்த
[மயமாகியே
வேதமொழி சொன்னவழிதவருது பேதமறவேதாந்த
[முடிவறிந்து
பாதகமெலாம் நீக்கி பற்றற்றமனமாகிப்பரமனின்
[பற்றருமல்
சாதனையிலே நின்றுசுகவாரிதன்னிலே சங்கநாதம்
[முழக்கி

வாதனைதரும் உலகபந்த பாசங்களைந்து ஏகநிலை
[மாறிடாமல்
போதனையெலாம் விட்டு துரியங்கடந்து துரியாதீத
[நிலையடைந்து
நூதனத்தோற்ற மெல்லாங்கடந்தேறியே கோனாகி
[நின்றகுருவே!
சீர்மேவுசென்னையில் ராயபுரமீது வளர்
[நற்குணங்குடி நாதனே! 2

சுத்தமயமாய் உலகிருக்கும்சத்வ நிலைகண்டறியாமல்
பித்தனைப்போல் பிதற்றிவரும் பேதை மாந்தர்
[உறவகற்றி
கத்தன்வெளியில் மனங்கலந்து கருணைவடிவே
[தானாய்;
முத்தனென்னும் குணங்குடியாய் வாழும்பரம
தேசிகனே! 3

வேதமுடிவை அறிந்தவர்கள் வேதாந்தத்தின் நிலை
[தெரிவர்;
நாதஒளிவைக்கண்டவர்கள் நாதாந்தத்தின்
[வழிபுரிவர்;
சோதி வெளியில் கலந்தவர்கள் சோமரவியின்
[உதிப்பறுவர்;
நீதியோங்கும் குணங்குடியான் தாளையடைந்தோர்
[பவமறுவர்! 4

ஆக்கையை வெறுத்து அல்லலைத்தவிர்த்து
அகத்துறைப்பொருளதை அறிந்து
சேர்க்கையை விடுத்துச் சிந்தனையகற்றிச்
சேர்ந்திடும் சிவபதமோனப் 5
பாக்களைத் தொடுத்துப்பலவினைத்தொடரும்
பந்தபாசங்களை நீத்து
வாழ்க்கையில் சென்னை வளம்பெறத்தனித்த
வள்ளலே குணங்குடியானே!

—குணங்குடிதாசன்